# நூல்செய்தற்குக்காரணம்.

கலிநிலைத்துறை.

பொருவில்கச்சியம்புராணம்வண்டமிழினிற்புகலென்
றிருநிலம்புகழ்மணிமதிற்கச்சியேகம்பர்
திருவருட்குரியான்றவர்கூறியசிறப்பா
லுரிமையுற்றெழுமாசையாலுரைத்திடலுற்றேன். ௧

# அவையடக்கம்.

மாயைகாரியவுருக்களுமெம்பிரான்வடிவ
மாயவேல்லவையருண்மயமாகுமற்றதுபோற்
பேயனேன்பிதற்றுரையுமேகம்பர்தம்பெருமை
தூயகாதையுள்ளுறுதலாற்றுகளறத்தோன்றும். ௧

இழித்தசொற்புணர்த்தெளியனேனியம்பியகவியுங்
கழித்தலில்வகையிலக்கணவழுவுக்குக்காட்டாப்
பழித்திடாதெடுத்தாளுவர்பல்வகைச்சுவையுங்
கொழித்தநாவினராகியவழுத்தபுகுணத்தோர். ௨

எழுத்துப்போலியுமெழுத்தெனவாளுவரதுபோற்
புழுத்தநாயினேன்பிதற்றியசெய்யுட்போலியையும்
பழுத்தகேள்வியோர்கைக்கொள்வரென்பதுபற்றி
விழுத்தநாணினேன்சிவகதைவிளம்புதற்கிசைந்தேன். ௩

நெறிவழாவுமைபூசனைபோனெறிபிறழ்ந்தோ
னெறிதருங்கலுங்கைக்கொளுங்கச்சியெம்பெருமாற்
கறிவின்மேலவர்காப்பியப்பனுவல்போலறிவின்
குறியிலேன்கவிப்புன்சொலுங்கொள்வதுவழக்கால்.

அவையடக்கமுற்றிற்று.

# நூற்சிறப்புப்பாயிரம்.

எழுசீர்டியாசிரியவிருத்தம்.

அருட்பணிக்குரியமகேச்சுரர்முதலாநால்வருந்தருகவென்றறைய
மருட்பகைதயிர்க்குங்காஞ்சிமான்மியத்தைவழங்குதென்மொழியினுரைத்தான்
கருப்பகையிரிக்குஞானமுமேன்மைக்கலைக்குங்கரிசறப்பயின்ற
மருப்பொழிலுடுத்தாவடுதுறையில்வாழ்சிவஞானமாதவனே.

நூற்சிறப்புப்பாயிரமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௨௯.

# திருநாட்டுப்படலம்.

### நாடுவாழ்த்துத்துறை.

கலிநிலைத்துறை.

பணங்கொள்பாம்பணிகம்பனார்பணிவளரபயந்த
வணங்கினோடொன்றுமமர்ந்தினிதரசுவீற்றிருக்கு
முணங்கரும்புகழ்க்காஞ்சியையகந்தழீஇயும்பர்
வணங்கமேவரும்பாலிநாட்டணிநலம்வகுப்பாம். க

### மழைவாழ்த்துத்துறை.

கடல்கடைந்திடச்செல்லுறாஉம்வெள்ளைமால்கடுப்பப்
படலைவெண்முகில்பரவைநீருழக்கிவாய்மடுத்து
விடமெழுந்தெனமீண்டவம்மாயனைவிழைய
வுடல்கறுத்துவிண்ணெறிப்படர்ந்தொய்யெனமீண்டு. உ

அற்றைஞான்றுமால்கயிலையைச்சரணடைந்தாங்குப்
பொற்றநந்தியஞ்சாரல்சூழ்பொருப்பினைக்குறுகிக்
கற்றைவார்சடைச்சுந்தரன்கடவுவான்மதுரை
முற்றுநான்முகிலெனவரை முழுவதும்பொதிந்து. ௩

முரிந்தவெண்டிரைக்கருங்கடன்முகட்டினைக்குழித்து
விரிந்தவெள்ளநீர்மடுப்புழிக்கரந்துடன்மேவிக்
கரிந்திடத்தனைச்செய்ததீவடவையின்களவைத்
தெரிந்துவில்லுமிழ்தடித்தெனத்திசைதொறுஞ்சிதறி. ௪

கான்றவக்கனன்மீட்டடையாவகைகருதி
வான்றனிற்குனிசிலையெனத்தடையினைவயக்கி
யேன்றநீயினியெதிர்த்தனையாயிடினின்னே
யூன்றனோடுயிர்குடிப்பலென்றுருமொலியெழுப்பி. ௫

அடுத்தடுத்தலைமோதுதெண்டிரைப்புனலளக்க
ருடுத்தபாரிலுன்கிளையெலாமுதலறவொருங்கே
படுத்துநின்வலிபாற்றுவன்யானெனப்பகைமை
தொடுத்தவெஞ்சினங்கொண்டுழன்மேலமர்தொடங்கி. ௬

விச்சைமந்திரவலியினால்வீங்குநீர்மழையை
வச்சிரக்கணையாக்கிமெய்வளமெனக்கருளும்
பொச்சமின்மறைவேள்வியும்புனிதனேந்தழலு
மெச்சமாகமற்றெவையுமீண்டறுக்கெனவியம்பி. ௭

### மழைவளம்.

காட்டகங்களுங்கழைநரல்கதிர்மணிச்சிமயக்
கோட்டகங்களுங்குளிர்புனற்கழனிசூழ்குலவு
நாட்டகங்களும்பரன்முரம்படுத்தெரிகடஞ்செய்
மோட்டகங்களுமுழுவதுங்குளிர்கொளச்சொரிந்து. ௮

இற்றொழிந்தனவொழியுமற்றெஞ்சியவெரிபோய்க்
கற்றவேதியர்வேள்வியஞ்சாலையுட்கரப்ப
வுற்றவாகண்டுதன்சினக்கனலையுமொருவி
வெற்றிமாமுரசெனமறைப்பேரொலிவிளக்கி. ௯

தனதுநீர்த்தியுந்திறற்பிரதாபமுந்தரைமே
லனல்செய்கோபமுமுல்லையுமென்வெங்குழமைத்துப்
புனிதமாமுனைவுதன்னையும்பொதிந்துகொண்டென்னப்
பனிவிசும்பினிற்சிவந்துவெண்ணிறம்படைத்தன்றே. க0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உடுவணிகுடுமிக்கோடுபிளவுபட்டுடையப்பெய்யுங்
கொடுமழைக்காற்றுதங்கட்குளிர்பெயன்மாறவெண்ணி
நெடுமலையெடுத்துக்காட்டுகெட்டிதழ்க்காந்தட்கொள்ளி
விடுசுடர்க்கனலியந்தப்புனலொடும்வீந்ததன்றே. கக

போதமேலாகப்பண்டேபுல்லியமலநோய்தீர்ந்தும்
வாதனைதாக்குமாபோன்மழைப்பெயன்மாறித்தீர்ந்தும்
காதல்செய்துறையும்புள்ளுமாக்களுங்கவன்றுநெஞ்ச
ேரதகமரங்களெல்லாநுண்டுளிதுவற்றுமாதோ. கஉ

கனைபெயலெழிலிக்கூட்டங்கலிவிசும்பகடுபோழ்ந்த
நனைமுடிநந்திக்குன்றுநளிபடப்பொழியுந்தெண்ணீர்
புனைமுறைவசிட்டமேலோன்செருத்தலான்பொழிந்ததீம்பால்
வனைபுகழ்வெள்ளமென்னத்திசைதொறும்வழிந்தமன்னே. கங

பாலியாற்றுவளம்.

கண்ணகன்குடுமிக்குன்றிற்கல்லெனக்கறங்கியார்த்து
விண்ணிவரேணியென்னவியன்முடிதொடுத்துவீழுந்
தண்ணறுவருவியெல்லாந்தலைத்தலைவிரிந்துதோன்றும்
புண்ணியப்பாலியாற்றிற்சேர்ந்துடன்போயமாதோ. கச

பாரிடங்குழித்துவீழும்பல்வயினருவியெல்லா
மோரிருமபாலியாற்றினொருங்குசென்றணையுந்தோற்றஞ்
சீரியபுவனந்தோறுஞ்சித்தியவினைகளெலலா
மோரிடத்தொருவன்றன்பாலுடங்குசென்றுறுதல்போலும். கரு

விலகிவீழருவித்தாரைவேறுவேறாகவோடிக
குலநதிப்பாலிவைப்பினேகமாய்க்கூடுந்தோற்ற
மலகில்பல்வழியுமூதாரணிமையினொன்றுமாறும்
பலபலமதமுமீற்றினொருவழிப்படலும்போலும். கசு

மலைநகைத்தனையகாட்சிவயின்வயினருவித்தாரை
சிலையினின்றிழிந்துமண்மேற்றிரண்டுசென்றணையுந்தோற்ற
முல்லைவயோடிகலிச்சேடனுயர்வரைக்குடுமியெல்லாம்
பலதலைவிரித்துப்பொத்திக்கிடந்தவப்பான்மைபோலும். கள

குரைபுனற்றண்டைநாட்டைக்குறும்பெறிந்தடிப்படுத்துப்
புரைதபநடாத்துகென்றுப்புதுமுகிலரசனந்தி
வரைமிசையிருந்துவேந்தாமணிமுடிசூட்டியுய்ப்பத்
திரைபடுபாலிவல்லேசிலையினின்றிழிந்துபோந்து. கஅ

அரசுகள்சூழ்ந்துசெல்லவருங்கணிமலர்வாய்விள்ளச்
சரிகுழற்குறமின்னார்கள்பற்பலதானைவெள்ளம்
விரவிடப்பரியகாலாண்மேதகுமாக்கடந்தி
மிரபடைதழுவிப்போதவிகல்கொடுவையமூர்ந்து. ககூ

அணிவகுத்தெழுந்துகுன்றாரும்பெறற்குறிச்சிபுக்கு,
மணிவகையாரம்பூண்டுமதுக்குடவிருந்துமாந்தித்,
தணிவறவெளிக்கொண்டேகித்தலைத்தலைவேட்டம்போகித்
துணிபடமாக்களெல்லாந்தொலைத்துடனீர்த்துச்சென்று. உ0

கலிவிருத்தம்.

மண்டமர்மேல்கொடுவேந்தனமின்னே
தண்டகநாட்டுறைதாபதர்நோயோர்
பெண்டிருநும்மரணேகுதிர்பெட்டென்
றெண்டிசையார்ப்பவிசைப்பறைசாற்றி

இருற்றிகிரிப்படைதாங்கியிபக்கோ
டுருத்திறல்வெஞ்சிலைகாந்தளரும்பு
நருப்பயில்கோலெனவேந்திகல்வீர
மருப்பகைமாய்த்துறவெட்சிமலைந்து. உஉ

முல்லையின்வேந்துமுடித்தகரந்தை
யொல்லையலைத்துயராநிரைபற்றி
மெல்லிதழ்தின்றுசிவந்தெழுவேய்த்தோ
ளல்லவர்கற்பையழித்துநடந்து. உ௩

வஞ்சிமலைந்தழலிற்பரலையவாட்டி
யஞ்சியிடாதுதன்னுணாயிருத்தி
யெஞ்சலுறுமருதத்திறையோடும்
வெஞ்சமரேற்றுழிஞைத்துணர்வேய்ந்து. உ௪

தடுத்தெதிர்நின்றதடங்கரையெல்லாம்
படுத்துமதன்பயிலபாசறைவிட்டி
மடுக்குளமேரியின்வாட்டமனைத்துங்
கெடுத்தனமென்றுதழீஇக்கிளர்வுற்று. உ௫

வீறியடாவகைவெஞ்சிறைகோலித்
தூறுமேள்ளர்தொலைந்தழிவெய்தச்
சீறியடர்ந்துதெழித்துமுள்வேலி
கீறிவளைந்துகிடங்கினைநீங்கி உ௬

நொச்சினையுற்றியங்கொச்சியிலுள்ளார்
பச்சிளநொச்சிபறித்தணியாமே
நச்சியதும்பைநறுந்துணர்சூடி
யச்செழுமாமதின்முற்றுமகழ்ந்து. உஎ

கொச்சகக்கலிப்பா.

இடித்துவெளிசெய்துநகரெங்கணுநுழைந்தாங்
கடுத்தமடவார்வயிறலைத்தனரிரங்கக்
கொடுத்திடுவளங்கள்பலகொள்ளைகொடுமெண்ணி
னெடுத்துவருவெள்வரகுகொள்ளுடனிறைத்து.

வெற்றிபுனைமாலிகைமிலைச்சியிருபாலுஞ்
சுற்றிவருபுட்குலநிரைத்தொழுதிதன்னுற்
கொற்றமிகுமார்கலியைகோக்கியறைகூவி
யெற்றுகழிநெய்தல்வழியெய்துறுதலோடும். உ௮

பௌவமதுணர்ந்துபுவளர்ந்தாளமாதி
வெளவுதிரையேந்திபெதிர்கொண்டடிவணங்கச்
செவ்விதினுவந்துபயுமீந்துதினமாறிக்
கௌவியமெய்யன்பொடுகலந்துளதையன்றே. ௧0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தன்னடிப்படுத்துமேலைத்தண்டகநாடுமுற்று
முன்னுறக்கவர்ந்துகொண்டவளத்தினுழைவிரட்டி
பின்னுறவளித்துவானிற்புலவரும்பெட்குமாற்று
லங்கிலேயுயிர்களோம்பியரசுசெய்துறையும்பாலி. ௧௧

காரணப்பொருளின்றன்மைகாரியத்துளதாமென்னா
வாரணப்பனுவல்கூறுமரும்பொருடெளியத்தேற்றும்
பேரிசைப்புவிமேல்யார்க்கும்பெட்டனபெட்டவாறே
சீரிதிற்கொடுக்குந்தேனுத்தரவருஞ்செழுநீர்ப்பாலி. ௧௨

வறுமையுற்றுழியுந்தொண்டைவளமலிநாட்டோர்தங்க
ளிறுமுடல்வருத்தியேனுமீவதற்கொல்காரற்றே
தெறுகதிர்கனற்றும்வேனிற்பருவத்துஞ்சீர்மைகுன்று
துறுமணலகடுகீண்டுமொண்புனலுதவும்பாலி. ௧௩

சொற்றவித்தீர்த்தமேன்மைசுவைபடும்பாலோடொக்கு
மற்றையதீர்த்தமெல்லாம்வார்தருபுனலோடொக்கும்
பெற்றிமையுணர்ந்துதொல்லோர்பெயரிடப்பட்டசீர்த்தி
பற்றியதெனலாம்பாலிப்பெருமையார்பகருநீரார். ௧௪

காட்டுவளம்.

கலிநிலைத்துறை.

விளம்புமித்தகைமணிகொழிவிரிதிரைத்தரங்க
வளம்புனற்றடம்பாலியான்வண்மைபெற்றோங்கி
யுளம்பயின்றுநாற்பொருள்களுமுளுற்றுநர்க்கிடமாய்த்
துளும்புமேன்மையிற்பொலிந்ததுதொண்டைநன்னாடு. ௧௫

செக்கர்வார்சடைச்சிவபிரான்றிருவருள்செய்யத்
தக்கவாய்மையினுயிர்க்கெலாந்தன்னிடத்திருந்து
மைக்கணெம்பெருமாட்டியெண்ணைன்கறம்வளர்க்குந்
தொக்கமாப்புகழ்படைத்ததுதொண்டைநன்னாடு. ௧௬

பவம்விளைத்திடாப்பெரும்பதியெனத்திசைபோய
சிவம்விளைத்திடுநகரந்தளேழுளுஞ்சிறந்து
தவம்விளைத்திடுகாஞ்சியைத்தன்னிடத்திருத்தி
நவம்விளைத்திடும்பெருமைபூண்டதுதொண்டைநாடு. ௧௭

தரைவிளங்கியதண்டகாட்டினிற்றகைசால்
வரையுங்கானமும்புறம்புணைப்பழனமுமணிநீர்த்
திரையும்வேலையுமென்னுகானிலத்தினுட்சிறந்த
புரையிலேந்திணைவளஞ்சிறிதறிந்தவாபுகல்வாம். ௧௮

குறிஞ்சி.

முருகவேட்கிடுதூமமோம்புறமுளியகில்சந்
துருவவாரமுற்பெய்துபுன்பயிர்விளைத்துவப்பார்
பெருவளந்துறந்தார்தொறுழிபெறுதிபேணும்
பொருவில்வாழ்க்கையர்தஞ்செயல்போன்மெனப்பொருப்பர். ௧௯

ஏறுதன்னுடல்வருத்தியபகைமையெண்ணாது
தூறுபன்மணிமா முதல்பொறையெலாந்தொலைத்த
வேறுநன்றியேகடைப்பிடித்திறைவியன்பொருப்பர்க்
கூறுநல்வளம்விளைத்திடுமுயர்ந்தவர்செயல்போல். ௫0

வேட்டைமேற்புகுவார்க்குநல்வினையுந்தமடவார்
கூட்டமவாய்க்குழச்சாரலிற்றினைக்குரற்கொய்துஞ்
சேட்டிளங்கிளிக்குலங்களைத்தெரிவைமாரோப்பும்
பாட்டிசைத்திறமொழியிருந்துனுதினம்பயிலும்.

நங்குலத்தருவாழ்க்கையைக்கெடுத்துநம்மிருக்கை
தங்களுக்கெனக்கொண்டவிவ்வேனல்கட்டம்மை
யிங்கண்வாட்டுதுமென்பதோர்சூழ்ச்சியெண்ணியுபோ
லங்கணெஞ்சியவேங்கைகள்போர்செய்தலரும். ௫௨

என்னையூர்ந்தருள்சுடர்வடிவிலையவேற்பெருமான்
றன்னைநன்மருகெனப்படைத்தவன்றனதூர்தி
யன்னதாமெனுங்கேண்மையாளிமுகிற்குலத்தைக்
கன்னிமாமயில்காண்டொறுங்களிசிறந்தகவும். ௫௩

நெருங்குபைந்தழைவருக்கைமேனெடுவெளியலைப்ப
வருங்கண்மாமயில்வீற்றிருந்தசைதருங்காட்சி
கருங்கண்மீரச்செம்மறன்மருகனைக்காண
மருங்குவந்துதன்னூர்தியைநிறுவுதன்மானும். ௫௪

சந்துமார்முழந்தாங்கிவம்பலர்ந்ததண்குவட்டான்
மைந்தர்கண்ணையுமனத்தையுங்கவர்ந்திடும்வனப்பின்
முந்துமோங்கலுங்கொடிச்சியர்குழக்களுமுகிரோய்
கந்தமார்குழைமுகத்தலரிலவங்கங்காட்டும்.

கொங்கையேந்தியவரணகளுமவண,கொம்புடைய
துங்கவேங்கையின்குலமெலாமவண,பரல்சுரந்து
பொங்குநீடுசேவின்ங்களுமவண,வான்புனலை
யங்கண்வேட்டுணுமொற்றைத்தாளொகினமுமவண. ௫௬

ஆணைலாமொருகன்னியைமணப்பவனணையுங்
கோணைவேங்கைகள்யாட்டினேறெவுகொண்டோங்கும்
பேணுசேவினஞ்சிங்கமேலேறிடும்பிழையா
தேணிறற்பொலியெகினங்களிடபத்தைவிழுங்கும். ௫௭

வில்லலர்ந்தபல்லுடுக்களும்விண்ணெறிப்படருஞ்
செல்லும்வெண்கதிர்க்கடவுளும்பானுவுந்திறல்சான்
மல்லல்வானவக்குழுவுமெய்ப்பாறவந்திருக்கு
மில்லமெங்கணும்வான்றொடவிழைத்திடுங்குன்றம். ௫௮

போதுமூன்றினும்போதுசெய்காவிசூழ்பொருப்பு
மேதகுந்தமிழ்க்கெல்லையாம்வேங்கடவரையுங்
காதல்பூப்பவத்தாணிகொண்டறுமுகக்கடவுள்
கோதுநீத்தரசாட்சிசெய்குறிஞ்சியக்குறிஞ்சி. ௫௯

அன்பெலாமொருபிழம்பெனத்திரண்டகண்ணப்ப
னெம்பிராற்கொருவிழியிடந்தப்புகாளத்திப்
பொன்பிறங்கியமுகலிசூழ்கயிலையம்பொருப்புந்
தன்புலத்திடையுடையது தடவரைக்குறிஞ்சி. ௫௦

நாவன்மன்னவர்க்கிரந்துசோறளித்திடுமெம்மான்
றேவியோடமர்திருக்கச்சூர்திருவிடைச்சுரமும்
பாவகாரியரெய்தொணாக்கழுகுசூழ்பறம்பு
மேவரத்திகழ்குறிஞ்சியின்பெருமையார்விரிப்பார். ௫௧

பாலை.

குராவளித்திடுபாவையைக்கோங்குபொன்கொடுத்துப்
பராரைப்பாடலம்பூந்தழற்பாங்கரின்மணப்ப
மராமரத்துளர்வண்டுபண்பாடவன்முருங்கை
விராவிவெண்பொரியிறைத்திடும்வியப்பினதொருபால். ௫௨

எயிற்றிமாரெழினலத்தினுக்கிரியல்போயுடைந்தாங்
குயற்பொதும்பர்புக்கலர்குராப்பாவைகண்டவர்தந்
துயிற்றுசேயெனக்கவன்றுபோய்த்தூதுணம்புறாக்கள்
வெயிற்றலைக்கணின்றுயருகுவநிலைமைவிண்டவர்போல்

தூதுணம்புறவினமெலாந்துணையுடன்கெழுமிப்
போர்தலூழியுமுணர்த்தியந்தலைத்தலைப்புணர்ந்து
காதலன்பலார்மொழியையுங்கடந்துசேணிடைச்செ
லேதிலாடவர்தமைச்செலவழுங்குவித்திடுமால் ௫௪

வெங்கதிர்ப்பிரானென்பகும்போதிலின்வேனின்
மங்கைகொங்கைகோய்ந்துளித்திடுமெபாலையாமைந்த
னங்கணனிலவரசர்பாலிரந்துவந்முராம்பு
தங்குசூழலிற்சிற்றரசாள்வதுமுளதால். ௫௫

முல்லை.

நவிலுமிந்நிலப்புறம்பயில்புறவநன்மடந்தை
குவிவருந்தழல்வெம்மைகூர்கொடும்பசிதணியச்
செவிலியாய்முகிறீம்பயமூட்டிடவளர்ந்தாங்
கவிழுநீள்வரகாதியாமழப்பயந்தளிக்கும். ௫௬

கொல்லையெங்கணுங்கொழுமலர்தகைபுனமுருக்கின்
முல்லைமென்கொடிபடர்ந்தலர்நிரைநிரைமுகிழ்ப்ப
வல்லைவென்றநகந்தரப்பிரானரகத்திமார்பிற்
முல்லைவெண்டலைமாலிகைதுயல்வரன்மானும். ௫௭

நீலம்பூத்தலர்பூவையைக்கோட்டுநீள்கரத்தாற்
கோலம்பூத்தபொற்கொன்றைகட்டிஇக்கிடந்தசைவ
லாலம்பூத்தருண்மிடற்றினோனன்றுமோகினியாஞ்
சீலம்பூத்தமாலிளமுலைதிளைப்பதுதெளிக்கும். ௫௮

பெண்ணலங்கனியிடைக்குலப்பிடிநடைமடவார்
விண்ணலங்கனிமாதரையெழிலினல்வென்று
பண்ணலங்கனிமிடற்றவர்பணைத்தமூக்கரிந்து
மண்ணிலெங்கணுந்தூக்கிவைத்தெனக்குமிழ்மலரும். ௫௯

மௌவலங்குழலார்விழிக்குடைந்துவான்குதிக்கு
நவ்விமீண்டகலாவகைமகளிரானனத்துக்
கொவ்வுறுதவராணையிற்றிரியுமெழுதன்மதிகண்
டவ்வுழித்தனதிருக்கையிற்சிறைப்படுத்தலைக்கும். சுO

கற்றைவார்குழலாய்ச்சியர்கயல்விழிமுகத்தின்
பெற்றியொப்புறப்பெருங்குருந்துச்சிமேற்றுவி
யொற்றைமானுடைக்கலைமதியதனிழலுறங்கு
மற்றைமானையும்பற்றுவான்கதிர்க்கையால்வருடும். சுக

நலம்பயின்றிளவேனிலின்விழுமாங்குயில்க
ளலம்புகார்வரும்போதுவாயடைப்பதுமுன்னாட்
புலம்புகொண்டவர்காரொடுந்தலைவர்தேர்புகுக
வலம்புனைந்துரைவளமொழிக்கிடைதலாமன்றே. சுஉ

தொண்டைமான்கடக்களிற்றினைமுல்லையாற்றொடக்கி
யண்டர்தம்பிரான்வெளிப்படக்காட்சிதந்தருள்சீர்
கொண்டவான்பதிமுதல்பலதன்னிடைக்குலவக்
கண்டமுல்லையின்பெருமையார்கட்டுரைத்திடுவார். சுங

மருதம்.

பொலஞ்சிறைச்சுரும்புளர்கருகுறுஞ்சுனைப்புறவ
நிலந்தனைப்புடையுடுத்ததுநெட்டிளவாளை
யிலஞ்சினின்றுமீப்பாய்ந்துவெண்மதிகிழித்தேகி
தலங்கொள்வானியாற்றலைவுழுந்தடம்பணைமருதம். சுச

ஒருவனாகியசிவபிரானுலகுயிரளிப்பக்
கருணைகூர்ந்துதன்னுவந்திருவேதமுங்காட்டுந்
திருநிகர்ப்பவோர்பாலியேவயல்வளஞ்செழிப்பப்
பெருகுதண்புனல்பற்பலகால்களாய்ப்பிரியும். சுரு

பராரைமூலமேற்பணைகிளைவளர்மரனைப்பலவும்
விராவியொன்றிலொன்றனந்தமாய்க்கவடுவிட்டென்னத்
தராதலம்புகும்பாலியிற்பிரிந்துதன்கணைக்க
ணராவுகால்களுமவைதருகால்களுமனந்தம்.

நான்முகப்பிரான்வேள்வியைத்தபவுருநதியை
மான்மறுத்திடைக்குலையுணக்கிடந்தமைமான
மீன்முகப்பெருங்காற்புனற்றடப்புவிழ்ந்துழக்கும்
பான்முலைக்கருமேதியாற்பருமடையுடையும். சுஎ

பழங்கண்வேனிலைப்புயல்கொடுபோற்றுதன்னிறைக்குத்
தழங்குமோதையின்மருதம்வாழ்த்தெடுப்பதுதனைய
வழங்குதண்ணுமையோதையுமள்ளரார்ப்பொலியு
முழங்குதீம்புனற்சும்மையுமுடுகிவிண்புகுமால். சுஅ

பொறிகளைந்தையும்புறஞ்செலாதடக்கியோர்நெறிக்கே
குறிகொளும்படிசெலுத்துபேராளர்தங்கோள்போற்
பிறிவுறும்பலமடைகளிற்பிழைத்திடாதொதுக்கிச்
செறிதரும்புனன்முழுவதுமகன்பணைசெறிப்பார். சுகூ

பழியினீங்கினன்கீட்டியபசும்பொருள்சிறிதுங்
கழிபடாதுநல்வழிப்பயன்படுவதுகடுப்பக்,
கொழிதிரைச்சுவைப்பாலியின்குளிர்புனன்முழுதும்
வழிவுறாதுகால்வழிச்சென்றுவளவயனிறைக்கும். ௭௦

தண்ணங்கன்புவிமுழுதுமாங்கடுங்கொலையவுண
னண்ணனன்மார்பகம்பிளப்பவர்போலவிர்மணியின்
வண்ணவன்கடாநிரைநிரையாத்துவன்படையாற்
பண்ணைதோறுநின்றுழுநர்கம்பலைகளேயெங்கும். ௭௧

மருவுசாறுறும்வெருவிமுன்குதித்தெழுவாளை
யிருமருப்பிடையுறைந்துழுமெருமையைத்தடுக்கும்,
பருவராற்குலமொய்யெனப்பாய்ந்தெழுந்தலைக்கு
முருவவாற்புறத்தீர்ந்துவல்விரைந்தெழவுந்தும். ௭௨

பூண்டவன்கொடுந்தானவனைக்கைபோழ்ந்திடலுங்
காண்டகும்புவிநன்னிறங்காட்டியதென்னக்
கீண்டசாறுறுங்கேழ்கிளர்தமனியங்கிடந்து
மாண்டபேரொளிவயங்கிநீள்கனையிருண்மேயும். ௭௩

வேறுசெய்துபின்பொருத்துறும்வினைவலவமைச்சிற்
கூறுசெய்ததன்சேறெலாங்குழப்பியொன்றாக்கிச்
சாறுசெய்துவர்சவற்றெழுதுறழிடர்தவிர்த்து
நாறுசெய்கெனவென்முளையித்துவர்நாளால ௭௪

அருள்விளங்கலுமுடல்பொருளாதியபுந்தும்
தருமவன்புடையெய்துறக்கொடுத்திடுந்தகைபோற்,
பெருகுயாத்தநீர்க்கலங்கல்போய்த்தெளிந்தபின்முழுது
மருவுகால்வழிவடிந்துறக்கவிழ்ப்பர்கண்மள்ளர். ௭௫

கலிவிருத்தம்.

இளமகப்பசிதனக்கேங்குகொங்கைப்பா
லளவறிந்தூட்டுதாய்மானவாறறி
களமர்கணமுளைபடுபுனல்செவ்விகண்டுநீள்
வளவயல்பாய்த்திதம்மகவினோம்புவார். ௭௬

ஓரிடத்துயிர்த்ததன்பறழையோம்புவான்
பூரிடைப்பல்வயினுய்க்கும்பூனைபோற்,
காருடற்களமர்கைந்நாறுவாரிப்போய்ச்
சேருடைப்பணைதொறுநடுதல்செய்வரால். ௭௭

மரகதந்தளிர்த்தெனவளர்பைங்கூழ்செறி-
தரநிறைகழனியுட்சங்கமூர்வன,
பரவைநீர்மேய்ந்தெழும்படலைக்கொண்டலுட்
சரமதிநுழைந்துசெல்காட்சிசாலுமால். ௭௮

களமர்கள்களைகளைபருவங்காட்டலு
மிளமயில்வயல்வளாங்காணவெய்தியாங்
குளமகிழ்கூர்தரவுழத்திமாரெலாம்
வளமலியணைதொறும்வந்துமுற்றுவார்.

அம்புயமுற்பலமாம்பலாதியாம்
பைம்புதற்களையறப்பறித்ததம்முருக்,
கொன்புனற்றேன்றலுங்கொய்த்புன்களை
பின்பினுமுளைப்பதென்பெயர்த்தென்பார்சிலர். அ0

பங்கயமாம்பலுற்பலத்திற்றேனுண்டு
தங்கியவண்டினந்தமதுவாண்முகஞ்
செங்கனிவாய்விழிசேர்ந்துமூகற
வங்கவைகட்டெட்டிந்தகற்றுவார்சிலர். அக

பாயிதழ்த்தாமரைபறித்தல்கொப்புமை
யாயுநர்ளமுகஞ்சேர்ந்திவைத்தேய்
வாய்மடுத்திணையிலதென்றுமாற்றல்போன்,
மீயுயர்கரைப்புறம்வீசுவார்சிலர். அ௨

இணைவிழிக்கிணையிலையென்பதன்மையி
னணுகிநீர்காண்ணைவ்வைத்துககாட்டல்போற்,
பிணையுநர்சியிலெறிந்திர்பிடித்துமோந்துதேன்
றணிவிலுற்பலமுடிசார்த்துவார்சிலர். அ௩

சைவலங்களைகுவாய்குனியத்தாழ்குழ
லெய்தியெம்மினத்திணையொறேன்மின்னன்பபோற்,
கைமிசைவிழுந்துசிக்குண்ணகைகாணிமிர்த்
தையபூங்குழன்முடித்தணிகின்றார்சிலர். அ௪

நறுமலர்ப்பங்கயங்களையுநரியர்
கறுவொடுமுள்ளரைக்காம்புபற்றலும்
தெறுகரங்கிழியப்புண்செய்யுமேதமக்
கிறுதிசெய்வார்க்கெவரிடரிழைத்திடார். அ௫

அலமருவிழியினமாமெனுமுக
மலர்மிசைப்பாய்தருகயலுமாண்டதன்
குலமெனப்புறவடிகூடுங்கூர்மமு
மிலவிதழ்கடைசியரெளிதிற்கைக்கொள்வார். அ௬

பறிதரக்களைந்தெறிபாவைமாரையம்
மறிபுனற்குவளைகால்வளைத்துப்பாம்பெனப்
பொறிவெருவுறச்செயும்புடைப்பின்மொய்ம்பிலாச்
சிறியருந்தம்மினந்தீங்கிழைப்பரே. அ௭

களிபடுசுரும்புளர்கமலக்கஞ்சமு
நளிபடுகுவளையுநனைகொராமபலுந்,
தளிரியற்கடைசியர்முழுதுஞ்சாடுவா
ரளிமருவலர்க்கெவரன்புசெய்குவார். அ௮

புரைதபுபசும்பயிர்ப்பொலிவுங்கதெலா
நிரைநிரைகிடந்தபன்னிறத்தபூக்களும்,
வரைதவிழ்முகில்களும்வானவிற்களுக்
தரையிடைப்பயன்பெறச்சார்ந்ததாக்குமால். அ௯

இருண்முகிலுறழ்பயிரிடையெலாந்தழீஇத்
தருகெழவயங்கியாங்குலவுழுநலார்
திருமலர்ப்பதமெல்லப்பெயர்த்துத்தேங்குழுழ்
கருஞ்சிமிழுர்த்தெழக்கரையிலேறுவார். ௬௰

தெறுங்களைகட்டநீர்ச்செறுவிற்பண்டுபோ
னறுங்களம்போருகச்சேக்கைநாடிவந்
துறுங்களியோதிமமுயங்கிவாடுவ
வறுங்களநாடியுண்மறுகுமாந்தர்போல். ௬௰௧

கொள்ளைபோய்நனிவறுங்கூர்ந்தகாலையும்
வள்ளியோர்விருந்தினர்வாடக்காண்பரோ,
கள்ளவிழ்மலர்வளமிழந்துங்கார்வயல்
வெள்ளனமகிழமீன்விருந்துநல்குமால். ௬௰௨

மண்ணகமகளிர்கைவண்மைகண்டயாம்
விண்ணகமகளிர்கைமேன்மைகாண்டுமென்
றெண்ணிமேற்சேறலும்றென்னவான்பயிர்
கண்ணிறைகவின்செழித்தோங்குங்காட்சித்தே. ௬௰௩

கொச்சக லிப்பா.

ஈன்றெடுத்தோர்குணமுகவுகிரையாமுறைப்படிவிதுதிற்
றோன்றுமுளைமுளைவிளாத்துப்பின்பசந்தொடர்பினு
லான்றசெழுங்கதிர்களுமுன்றூவெள்ளையாயெழுந்து
மான்றுமரகதமேனிவாய்த்துமடலவிழ்த்தெழுமால். ௬௰௪

வரமகளிரங்கைவளமறிபாக்குமேற்போந்து
திரையெறிநீர்க்கடல்வரைப்பிற்றெரிவையர்கைகதிர்ணயொவ்வா
மரபுணர்ந்துமீண்டென்னவாணேக்கிக்கதிர்தெழுந்த
பரவுபுனற்றடஞ்சாலிபார்நோக்கியிறைஞ்சுமால் ௬௰௫

பேதைமையிலாடவர்முன்வளைவின்றிப்பெதுமபைமையின்
மேதகச்சூழ்றெனவணங்கிமங்கைமையின்மிகநாணு
மாதரைப்போற்பைங்கூழின்மன்னமனிதிர்கதிர்தமதெழுந்த
வேதமிலாக்கதிர்முதிர்ந்துவரவரக்கீழிறைஞ்சுமால். ௬௰௬

உருத்திட்டமுருககாலைத்தலைநிற்இயுற்பதற்பின
றருக்கற்றுநனிவணங்கிப்பழுத்தகதிர்த்தடஞ்சாலி
பெருக்கத்துவேண்டுமாற்பெரும்பணிவுமிகச்சிறிய
சுருக்கத்துவேண்டுமுயர்வெனுமொழியின்சுவைதேற்றும். ௬௰௭

தூமதிவாக்கியகிரணந்துளித்தென்னக்கதிர்ச்சாலி
காமர்மணித்தாளங்கள்கான்றுசெறுத்திடராக்கிப்
பூமலரக்கால்யாத்தபுனன்முழுதும்புறங்கவிழ்த்து
மாமைநீர்புலர்த்தவருமள்ளருளமகிழ்விக்கும். ௬௰௮

வணங்குகுலைக்கதிர்ச்சாலிசிலையாகவளர்புதழீ
யுணங்குக்கதிர்கணையாகவொளிர்முளரிக்கரம்பற்றி
யிணங்குபசுங்குரல்கவரவரும்புட்களிரிந்தோட
லுணங்குபுரிந்தெதிர்கண்டோரதிசயிப்பச்செய்யும்பணைகள். ௬௰௯

குறையவித்தினகொண்டகுடியெலா
நிறையச்சாலிநிரப்புவயூம்பணை,
யிறையளித்தவிருநாழிநெற்கொண்டே
யறமெழலாநிறைவிக்குமமலைபோல். ககO

கொடுப்பகொண்டுபெருக்கிக்கொடுத்தலா
லடுத்தவாணிகர்போலுமகன்பணை;
யுடுத்தசோலைகளும்பர்கடவுணீர்
மடுப்பதென்னவளர்ந்தெழுந்தோங்குமால். ககக

கலிநிலைத்துறை.

கொண்டலுருக்குமூரலிநிகர்ப்பக்குளிர்பாளை
விண்டுமுகைக்கும்பைந்தமுகெங்கும்விளையாட்டு
வண்டலர்கொங்கைக்கிடையிளநீர்மூழ்லவர்காண
தண்டமிசைக்கொண்டெய்தியளிக்கும்வளர்தெங்கு. ககஉ

செற்றெயில்வென்றார்தேர்மிசைமேற்போக்கெனமென்பூந்
துற்றபொதும்பர்த்துறையிளினத்தாற்செருவேற்றுப்
பற்றியவாவிநீங்குபுபைந்தேனடைகீறி
யுற்றெழுவாளைபொருதுயிர்விண்டோர்கதிகாட்டும். ககஙு

போதுகண்மேயநெடுங்கயமேவுபுனிற்றுக்கார்
மேதியையாயிடைவாளைவெகுண்டுவிசும்பேறி
பாதிவெரிந்புறமுட்குழியக்குதிபாய்ந்தாடி
மீதுயர்திண்கரையேறவுகைக்கும்வியப்பிற்றால். ககச

சுவையொளியூறொலிநாற்றமெனைந்தின்றொடர்பற்றிக்
கவர்படுநெஞ்சிற்றிரைதிரைதோறுங்கடைநீர்நாய்
துவளவெழும்பாமுறைமுறைகீழ்நீர்ச்சுழல்காட்சி
யெவருமிறும்பூதுறவுளவேரித்தடமெங்கும். ககரு

கரைத்துறுதண்பூங்காஞ்சிகள்சாகைக்கரமோச்சி
விரைததகரும்பைத்தைவருதோற்றம்விரிதார்வண்
டிரைத்தெழுதிண்டோட்கேள்வரொடூடுமிளையார்மே
னிரைத்தமர்செய்வான்வேள்சிலைபற்றுநிகழ்விற்றால். ககசு

மேதகுசெவ்வணிதாங்கினர்செல்லுமினன்னாரும்
தீதறவெள்ளணிபூண்டுசெல்சேடியராரோரும்,
போதலுமீடலுமாய்ப்பொலிவீதிகளெங்கணுங்
காதல்செய்சேரிமடந்தையருள்ளங்கவல்விக்கும். ககஎ

தசும்புறழ்கொங்கையொடெம்பெருமான்மகிழ்தண்பாசூர்
விசும்பையுரிஞ்சுமதிற்றிருவல்லம்விரைச்செந்தே
னசும்புதடம்பொழிலேனையவைப்புழனந்தஞ்சூழ்
பசும்பணைமாமருதத்தெழில்யார்பகர்கிற்பாரே. ககஅ

நெய்தல்.

கொச்சகக்கலிப்பா.

அம்மருதவைப்பினையடுத்தகழிநெய்தன்
மம்மர்விடவாலமுணக்குதவுமாற்று
ளம்மினமெனப்பொய்ம்மொழிகாடியுரைஜதை
சும்மையிவளக்கரொலிசூழ்ந்தமவுகொள்ளும். ககசு

கண்டன்மடலேறவலர்தூற்றுகமழ்புன்னை
யுண்டுறைகாலுமளியொத்துடனிசைக்கும்
வண்டுளரரும்புவிரிநெய்தன்மணமிசையுங்
குண்டுகழிமேய்பறவைநோக்கிமகிழ்கூரும். கஉ0

கண்டுமொழியாரவயவத்தெழில்கவர்ந்து
தெண்டிரையளக்கரினெளித்ததுதெளிந்து
கொண்டதுறையோர்கடல்குளிப்பர்துகிர்சங்கம்
வண்டரளம்வாரிமடவாரெதிர்குவிப்பார். கஉக

எம்முடையுறுப்பெழிலைவவ்வினிர்களென்னாக்
கொம்மைமுலைவம்பணிபரத்தியர்வெகுண்டு
விம்முவளைசேல்பவளம்வெண்டரளமற்று
மம்மபிறர்கொள்ளவிலையாற்றிமகிழ்கூர்வார். கஉஉ

கண்ணெழில்கவர்ந்தகடன்மீன்களையுணக்கு
முண்ணமிழ்தமன்னமடவார்பறவையோப்பும்
பண்ணிசைமடுப்பவிழைபய்வழுழருக்கன்
விண்ணெழுபகற்பொழுதின்மெல்லெனவொலிக்கும். கஉங

தணந்தவர்களாருயிர்வருத்தவிறல்சாற்றி
மணந்தழுவுதும்பைமலர்சூடியடன்மார
னணங்கமர்செய்காலமெனவோர்ந்துமுரசாழி
யிணங்குறவிராப்பொழுதின்மிக்கொலியெழுப்பும். கஉச

வீழ்ந்தவர்தணத்தலின்விழிப்புனலுகுத்துத்
தாழ்ந்தழுதிரங்குமடமாதர்தமைநோக்கி
யாழ்ந்தகழியாதுமுடனின்றழுவதென்னச்
சூழ்ந்துபுளரற்றமலர்தேத்துளிதுளிக்கும். கஉரு

நலம்பயில்பொருட்குமலிவங்கமிசைநண்ணுறும்
புலம்பர்வருகின்றவழிநோக்கினர்புலம்பி
யிலம்படுமடந்தையர்களின்னுயிர்தளிர்ப்ப
வலம்புகுளிர்பூந்திவலைவீசுமலைவாரி. கஉசா

புன்புறாதத்தரும்வியந்துபுகழ்செய்ய
வென்னையொருபெண்ணெனவியற்றுநகரொற்றி
நன்பதிமுதற்பலவுடுத்தருளிநெய்த
றன்பெருமையாவரளவிட்டறிதரத்தோர். கஉஎ

திணைமயக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருத்தொண்டைநன்னாட்டுநானிலத்தைந்திணைவளமுந்தெரித்துக்காட்ட
மருத்தொண்டைவாய்ச்சியர்சூழ்குன்றைநகர்க்குலக்கவியேவல்லானல்லாற்
கருத்தொண்டரெம்போல்வாரெவ்வாறுதெரிந்துரைப்பார்கலந்தார்க்கின்ப
மருத்தொண்டரணியிலவையொன்றோடொன்றியைந்தனவுமாங்காங்குண்டால்.

வரைப்பிண்டிமலர்தூவிவனிப்பலாச்செதிர்சொரிந்தமலருண்மூழ்கி
நிரைக்கும்பூங்கணைதூவிமதனெழுமான்விழிநெருப்புனிற்றல்காட்டும்
வரைக்குன்றுதறிக்கொடிபோய்க்கடுக்கைமிசைமரகததோரணம்போற்றூங்
கிளைக்கின்னவார்சணமுமெதிர்கடப்பப்பொருநர்செவெக்கவிறகாட்டும்.

விண்முட்டுங்குடுமிவரைத்திகிரிபடும்வண முத்தும்வேலைச்சூழல்
மண்முட்டநறும்புன்னையுகுமரும்புத்தலைமயங்கியவற்றுட்சேர்ந்த
தண்முட்டையிதுவென்னப்பகுத்தறியவல்லாதுதளர்வுகொண்டு
கண்முட்டவளம்புடைத்தவயுலன்னூந்துயர்கூருங்காட்சித்தோர்பால்.

குறுஞ்சுனையிற்களிவண்டுசூழன்றுடுங்கான்குயில்கள்குரைநீர்ப்புன்னை
தொறும்பொதுளுங்கருங்கொடிதன்குடம்பையிற்போய்க்கருவுயிர்த்துச்சலவிமீண்டு
நறும்பிரசமலர்க்காஞ்சிச்சினையேறியொளியிருந்துநாடிக்கால
முறுந்துணையுமினிதுறையுமுலவாதவளங்காட்டியோங்குமோர்பால். 141

கறிக்கொடியுந்துகிரக்கொடியுநெடுவயலிற்பசுங்கொடியுங்கமழ்தேன்மௌவல்
வெறிக்கொடியுநாற்றிசையுந்தாய்ப்படரநவெளர்ந்தவிரைக்குராமேற்
கிறிக்கொடியுபெருங்காற்றுற்பலுகாலுமசைபாலைக்கிளர்ச்சிவாளங்
மறிக்கொடியுங்கூத்தியர்செய்கிறுவிசிகழைக்கூத்தின்வயங்குமோர்பால்.

இனையநானிலமுடுத்தவளாகமெலாம்பெருங்குடிகளியல்பினோங்கித்
தினையளவுமுறைபிறழாத்தொண்டைநாட்டணிமுழுதுந்தெரித்துக்கூறக்
கனைதிரைநீர்க்கடலாடைநிலவரைப்பின்யாருளரோகற்பநாட்டுந்
தனிகர்பாதலதலத்துமன்னதேயெனிற்பிறிதுசாற்றுமாறென். 143

ஏங்நாட்டுப்பெருவளமுமெய்வெவர்கோட்பாடுகளுமியம்பவல்ல
பொன்னாட்டுப்பொன்செருக்கும்பன்னுக்குப்பணிச்செருக்கும்போக்குமித்த
நன்னாட்டைப்புலவரெலாந்தொண்டைநாடெனவுரைப்பர்ஞாலமங்கை
தன்னாட்போதனையுமுகக்கனிவாயாங்காரணத்தின்சார்பாற்போலும். 144

சலதியுடைச்சேயிழைக்குத்தமிழ்நாடேமதிமுகமாத்தமிழ்நாட்டுள்ளு
மலர்புகழ்த்தண்டகநாடேகனிவாயாவதனுள்ளுஞ்சாதிபேதங்
குலவுமாருயிர்களெல்லாந்தத்தமதுமரபொழுக்கங்குன்றாநகைசேரா
மலகமெனத்தேற்றுதலினுவெனலாங்காஞ்சிநகர்வண்மைசொல்வாம். 145

திருநாட்டுப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௪௨

# திருநகரப்படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கச்சிமாநகரோர்தட்டுங்கடவுளருலகோர்தட்டும்
வைச்சுமுன்னயனூர்தூக்கமற்றதுமீதுசெல்ல
நிச்சயமுறுகித்தாழ்ந்துநிலமிசைவிழுமிவ்வூரை
யிச்சகத்தூர்களோடுமெண்ணுதன்மடமைப்பாற்றே.

கவினெலாந்திரட்டிக்காஞ்சிக்கடிநகராக்கிக்கஞ்சத்
தவிசினோன்றன்பானுட்பத்தொழில்செயச்சார்ந்தகாலைப்
புவியிடைக்கழிந்தசேடம்பொற்பமேவேறெடுத்துவிண்ணு
டவிர்தரச்செய்தான்போலுமன்றிவேறுரைப்பதென்னோ. உ

ஆதிநாண்முக்கணெம்மானயன்றனைப்படைத்துவேத
மோதுவித்தருளினுக்கியுலகெலாம்படையென்றேவும்
போதினுயார்த்திவ்வாறுபடையெனப்புகன்றுவைத்தா
ஞதெனவூருங்காஞ்சியென்னுமையவைத்தாமே.

இந்நகர்நோக்குந்தோறுமிமையவர்தமதுநாடு
நன்னரென்றிருந்தத்தம்மைத்தாங்களேநாணிநைவர்
முன்னொருசமயந்தன்னைப்பொருளெனக்கொற்றிநின்றோர்
பின்னர்வான்சைவமெய்தப்பெறினவர்பேசுமாபோல். ௪

நீடிழிங்கரமன்னிநெடுந்தவமுயல்வோர்வான
நாடர்தம்பதமுங்கஞ்சனரணன்வலாரிவைப்பும்
பாடிரிகான்றசோறுக்காண்புதிப்பதியின்வன்மை
கோடியிலொருகூறுவ்வாவவையெனக்குறித்தேயன்றே. ௫

## புறநகர் - சோலை.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுரும்புகாலுழக்கமுகையுடைந்தலர்ந்துதுளிததீஞ்சுவைமதுப்பிலிற்று
மரும்பெறற்சோலைமீமிசைக்கருவிமுகிற்குழாமுட்டிவர்பாட்டளிக்கு
விரும்புதேனளியாக்கற்பகநாட்டைவெல்லுவான்வருவதோர்ந்தஞ்சித்
தரும்புகழ்வலாரியூர்தியைச்செலுத்தித்தடுத்திடைமடக்குதன்மானும்.

நறவமூற்றெடுப்பச்சிறகர்வண்டிமிருநளிபொழிலிடும்பைகூர்ந்தழுகு
குறைப்படப்பொதிந்தகுயினகளைவல்லேகுதித்தெழூஉதைத்துதைத்தகறறி
நிறைபுனற்றடத்துப்பிறழ்தருங்கிழமைமிநெட்டிளவாளைமீன்றனகுத்
துறைதொறுங்கைம்மாறெனக்கனிசெழூஉந்தேனசொரிவனநெடுமரப்பொதும்பர். ௭

வண்டலாட்டயரும்வாண்மருணெடுங்கண்மங்கையர்நெறிசுரிகூந்தற்
கொண்டலைக்காணுந்தொறுந்தொறுமவர்தங்கோமளச்சாயலுகக்குடைந்து
தொண்டுபூண்டிடினின்றுவேதேய்ப்பதேதோகைமாமயிலடங்குயிற்றற
தண்டளிர்துவன்றிப்புதுநறுந்துளிகுந்ததைமலர்ச்சாகையம்பொதும்பர்.

வாம்பெருந்திரையதடம்புடையுடுத்தவளமபொழிற்சாகைகடோறும்
தீம்புனல்குடையுமாதரார்முன்னட்டெறித்தபட்டாடைபொன்னணிகள்
பூம்புனலகத்திற்றோன்றலுமிளையோர்புனலரமகளிரென்றஞ்சிக்
கூம்பியகரத்தரநலார்நகைப்பக்குலைமிசைநோக்கிவெள்குவரால்.

கொங்கவிழ்பொதும்பாக்கொழுமுகையுடைந்துகுளிமதுசசொரிதலினைந்து
புங்கயச்சேக்கைமீமிசைமயங்கிளம்பைப்பயமேனிவந்தெழுவ
பொங்குவெம்பாவக்கருமுருட்டமண்றைபுணரியுட்சிலையுடனமிழ்ந்து
மெங்கள்வாகீசரஞ்செழுத்தருளாலெழுந்துமேல்வயங்குதன்மானும். ௧௦

## யானைக்கூடம்.

கலிவிருத்தம்.

முறைமுறைபணைக்கைநீர்முகந்துவாய்மடுவு
நிறைதடங்குறைதடமாக்குநீண்டவெண்
பிறைமருப்பொருத்தன்மாமதப்பெருக்கினாற்
குறைதடநிறைதடமாக்குங்கொள்கைத்தே. ௧௧

தாமுறையிடந்தரியலர்கட்கீந்தவர்
தாமுறையிடங்களிற்றங்கிளைக்குலந்
தாமுறப்பரிவருத்தனைசெய்வேழங்க
டாமுறைமுறைதிரிதண்டமெண்ணில.

மழைப்புனறங்கண்மேலூற்றுமாமுகி
லுழைச்செலவெகுண்டெதிரிறைப்பதொப்பநீள்
புழைக்கையினிறையநீர்முகந்துபோர்மதத்
தழைச்செவிக்கரிகள்விண்டலத்துவீசுவ. ௧௩

கறையடிச்சுவடெனுங்கனகவட்டில்க
ணிறையவாக்கியமதநீரைச்செல்வர்போற்
சிறையளிக்குலமெழலாந்தெவிட்டவுண்டுவாழ்ந்
தறைபெருவளத்தனவாம்பல்வீதியே. ௧௪

கொடையினிற்கீழ்ப்படுங்கொண்டல்யானையுந்
தடைபடச்சிறையிலிட்டாங்குச்சார்கடு
நடையிருமுறச்செவிநான்றவாய்க்களி
றடையவும்பிணித்தனவளவில்கூடமே. ௧௫

துரகப்பந்தி.

கரியுமிழ்விலாழியுங்காய்சினக்கடும்
பரியுமிழ்விலாழியும்பாய்ந்துசேறுசெய்
தெருவெலாமுந்நலார்சிறடிச்சுவ
டுருகெழுதாமரைதோற்றமொக்குமே. ௧௬

சுலவுகொய்யுளையடிச்சுவடுதோறுமேற்
கலனையினுக்கமெம்மணிகதிர்ப்பன
பலசுடர்த்தகழிகள்பரப்பிவைத்தெனக்
குலவுநல்வளத்தனகுந்தவீதியே. ௧௭

மல்லரைமயிலைகளைவானரங்களைப்
புல்லியமும்பலகளைப்பொருசரங்களை
வல்லவாபுறகொரடைகண்டவான்கதிப்
பல்லியற்புரவியின்பந்தியாயிரம். ௧௮

மதக்கரிதனைமுயலவயங்கொள்காதையைப்
புதுககவீங்கிருவொளிப்பொலிவைப்பற்றியிர்த்
ததிர்ப்பதென்றுளுந்தொளக்கிரியவாங்குரா
கஜூதத்தொகைபற்றுபொற்றேர்கணக்கில. ௧௯

எரிமணிச்சோதியுண்மூழ்கியிர்ததுச்செல்
பரிகளைக்காண்கிலர்பார்த்துச்சூரனும்
திருவுடையிந்திரஞாலத்தேர்கொலென்
றருகெழச்செல்லுதேருலப்பில்வீதியே. ௨௦

வீரரிருக்கை.

நால்வகைநிலையினுற்பயிலுநாமவில்
வேல்வளைபலகைவாள்கற்கும்விஞ்சையர்
கோலவான்விஞ்சையர்குமரங்களைக்குப்
சால்பினைவியத்தகுதலைமைப்பாலரே. ௨௧

கிம்புரிபுரசைகள்கிடுகுகூவிர
மம்பொனிற்கலனைகுப்பாயமாதிய
வெம்படையேனவும்வேறுவேறுசெய்
பம்பியவினைஞர்வாழிடம்பல்லாயிரம்.

நடைநகமுதலியவுலவுநாமதீர்ப்
புடைநகர்வளமிதுபுகன்றுந்திங்களே
ருடைநகமமைநிகரோதியார்பயி
லிடைநகர்வளமினியியம்பலுற்றதே. ௨௧

இடைநகர்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குடமுலைக்கெதிரென்றேறுதுங்குரும்பையைவெகுண்டுமின்னார்
பொடியிடியுலக்கைமீப்போய்ப்புடைத்தனமீளமுன்ன
முடிமிசையதிரத்தாக்கிச்சிந்துமுப்புடைக்காய்த்தெங்கீங்
கிடரிடர்க்கெதிர்செய்வோரின்வியத்தகவெங்குமோங்கும். ௨௪

கோல்வளைகறங்கக்கொங்கையசைதரக்குலையக்கூந்தன்
மேலணிகலகலென்னவியர்வெழவுயிர்ப்புநீள
வால்வரிப்புனம்பந்தாடுமாதரார்செயல்காண்டோறுங்
கால்வரிகழலினர்க்குக்காமமீக்கூருமாதோ. ௨௫

தமதுருநிறத்தைவவ்வுந்தருக்கறிந்தொறுப்பார்போலத்
தமனியந்தகர்த்தசுண்ணமொருவர்மேலொருவர்வீசத்
தமனியச்சுண்ணமெங்கும்பரந்தனதவழ்தலாலே
தமனியவுலகந்தன்னையுசிப்பனதடங்தேர்வீதி. ௨௬

எரிமணிசோதிகால்விருள்வரவறியாமாடத்
த்ரிவையர்கூந்தலூட்டுமகிற்புகைநாகத்தெய்திப்
பெரிதிருள்விளைப்பநோககும்பெற்றியோர்கட்டுமாறு
மரீஇயினவுலகமென்னேயெனமனமருள்வரம்மா. ௨௭

அகழி.

மாற்றவள்பூசையாற்றிவரம்பெறுமுறைமைகேளா
வேற்றமார்கங்கையாளுங்கம்பர்பால்வரத்திற்றெய்திச்
சாற்றருங்கச்சிமூதூர்வலங்கொளுந்தகைமைத்தாய
வாற்றல்சாலகழியாழமகலமாரளக்கவல்லார். ௨௮

நெடுபடுபொதும்பர்சூழநிரைநிரைக்கரத்தாற்செம்பொற்
றடமதில்பொதியப்புல்லுந்தண்கிடங்கிறைவரேவக்
கடல்களேவளையநோக்கிக்கம்பரையிறுகப்புல்லுஞ்
சுடர்மணிக்கங்கைமாணுந்துளித்தநீர்தழும்புமாணும். ௨௯

திரையெறிதரளம்பாங்கர்த்திரண்டுவாலொளிகள்வீசிக்
குரைபுனல்குளிக்கும்வேழக்குழாத்தைவெண்கயமாச்செய்யக்
கரைமிசைக்காண்போரென்னேயிம்மையேகடவுட்டன்மை
புரைதபத்தருமித்தீர்த்தமெனவிறும்பூதுகொள்வார். ௩௦

கடம்படுகளிநல்யானைகுண்டகழ்கலக்கிக்கொட்பத்
தடங்கரையேறற்கார்த்துத்தாட்டொடர்பிணித்துப்பாக
ரிடம்படவிருபாலீர்ப்பவிருங்கடலமுதமுண்ணத்
தொடங்குநாட்சிலம்புநட்டுச்சுராசுரர்கடைதன்மானும். ௩௧

நவமணிகொழித்துப்பொங்குநளிதிரையகழிநாப்பட்
கவளமாக்கடத்தயானைக்கணஞ்சுலாயுழக்குங்காட்சி
புவர்படாப்பௌவமீதென்றுவந்துவங்தெழுமிதெண்ணீர்
சுவறவாய்மடுப்பக்கொட்குந்தோற்றமேயனையதம்மா. ௩௨

இத்தகையகழியென்னுமிதுவுமோர்கடலேயாக
வித்திறனிரட்டியென்றே மெனவுரைவர்மேலோர்
தத்தலேக்கடைக்கால்வட்டச்சிலிஇயும்மதுமன்றச்
சுத்தநீர்க்கடலென்றெண்ணியொருமையிற்றெருக்தார்போலும். கங

புடைபயில்பொதும்பர்த்தேனும்புனன்மலர்த்தேனும்பாய்ந்து
விடையவர்க்குமையாளாட்டவருமதுவேலேயொக்கும்,
குடகிகர்செருத்தன்மேதிகொட்புறச்சொரிந்தபாலா
லுடைதிரையகழிதீம்பாலளக்கருமுற்றுமொக்கும். கச

பழமுகற்பொருள்கள்விற்கும்பாவையர்காணுமிழ்ந்திப்
பொழுதினக்கலன்கழீஇயவண்டலாற்புனற்கிடங்கு
வழிபடுமுமையாளொண்கைக்காட்டுமொழியங்களொன்றும்
கழிவுறுசூழத்தேங்கிக்கிடந்ததேகடுக்குமன்றே. கரு

பாசடைக்கவயம்போர்த்துப்பகைஞரோடிகலித்தாலும்
பூசலேவிளைப்பவன்னோர்கணைபொருபுழைகடோறும்
தேசுறவெழுந்தசேறரியாமெனச்செய்யகஞ்ச
மூசுவண்டியினார்ப்பமொய்த்துளதகழித்தெண்ணீர். கசு

அணிமலரழகேநோக்கியகழியாளிழிகின்றோரும்
இணியுமுட்கொடுமைநோக்கிச்சேயிடைவிலகுவோரும்,
கணிகையர்கோலநோக்கிக்காதலித்தகப்பட்டோரும்
பிணியுமுட்கருத்துநோக்கிவெரீஇப்பெயர்ந்தகல்கின்றோரும். கஎ

மதில்.

(உமை) கலிநிலேத்துறை.

கம்பையைத்தடுத்தபின்புசம்பனோமைத்தலும்
பம்பியார்த்தொருங்குபொவமேழுபுற்றுயாறுணர்ந்
தம்பையண்டமித்திகாறுமாக்குமாத்தடைப்பொர
வம்பலர்க்கிடங்குசூழ்ந்தமல்லலிஞ்சியோங்குமே. கஅ

திருக்கிளர்ச்சியிற்செருகருதேவநாடுபாதலத்
தருகருநோக்கிவெஞ்சினந்தலேப்பெனாள்காஞ்சியப்புவலி
முருககவெண்ணிமுன்புபோய்வளேப்பவேலிமூண்டென
மருக்கிடங்குமிஞ்சியும்வியத்தகும்வளாத்தவே. க௯

கிடங்கினெல்லேகாண்பதன்றுகீழுமேலுமாகநீள்
விடங்கர்தாளணிந்துவிண்டுநோக்கமேவியன்னதிற்
றடங்கொளெல்லேகாண்பதுந்தலேவர்தஞ்சடைத்தலே
யிடங்கொள்வெண்டலேயலாபலேவர்காணவல்லரே. உ0

கச்சிவாணர்சென்னிதாள்கள்காணமுன்பறந்தகழ்ந்
தச்சழிந்தமால்விரிஞ்சரன்றுசென்றவெல்லேக
ணிச்சயிப்பவவ்வளவுமேகவைத்தநீள்குறி
கொச்சியுங்கிடங்குமென்னநோக்குவார்க்கிலங்குமே. உக

இடித்தகழ்ந்துதம்மிருக்கையேற்றநீர்க்கிடங்கினில்
வெடித்தெழுந்துதாவுவாளேமீனமீண்டுறுவகை
யடுத்துவிக்கவுண்டுதேக்கியம்பரத்துமீனையுந்
தடுத்துவென்றிகொள்ளவுள்ளசார்மதிற்பொறிக்குலம். உஉ

உடல்படைத்தியக்கவோர்ந்திமித்தனுண்டெனக்கொளத்
திடம்வலித்தசான்றதாயுவனர்தாட்செயப்படுந்
தொடர்புடைப்பொறிக்குலஞ்சுழன்றெழும்விழும்புகை
மிடல்கெடத்தெழிக்குமேரமீளுமின்னனீரவே. ௪௩

இம்மதிற்பொறிக்குலமெதிர்த்துளோர்தமைச்செகுத்
திம்மெனுமுன்வென்றிகொள்ளுமீதுணர்ந்துதெவ்விர்கா
ளும்மவீண்டுறேன்மினென்றுகையெடுத்தசைப்பபோ
லும்மதிற்றலைத்துகிற்கொடிநுடங்குமாலரோ. ௪௪

கலிவிருத்தம்.

வளமகன்றிருநகர்க்கிழத்திமாமைசா
ளிளமுலைதிளைப்பக்கரமெழினிசேர்த்துபு
தளர்வறநாட்டியதம்பமேயெனக்
கிளர்மதிலிடந்தொறுஞ்செறியுங்கேதனம் ௪௫

நேமிமால்வரைமிசைக்கிளைத்துநீண்டவே
யாமெனக்கொடிமிடையமபொன்பாமதின
மீமிசைக்கோபுரமேலுஞ்சேறலால
யாமினிப்புகல்வதற்குவமையில்லையே. ௪௬

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மகதநாடென்னக்காஞ்சிவைப்பினுங்கடைஞரெய்தி
யிகலறவளர்க்குமெண்ணெண்கறத்தினுககிடர்செய்யாமைத்
தகையுணங்குமையாள்வைத்ததடைநிகர்மதிற்சீர்முற்றும்
புகரறவியம்பப்புக்காற்புலவர்க்குமுலப்புறுதே. ௪௭

மிடைபுறத்தூர்களெலலாம்விண்ணவர்நகராவுங்கட்
புடைநகரயனூராகப்பூமகள்கொழுநன்றன்னூ
ரிடைநகராகமற்றையீசனூருலகமேயா
நடைபிறழாதகீர்த்திபடைத்தவண்ணகாஞ்சொல்வாம். ௪௮

அகநகர் - பரத்தையர்வீதி.

அளிமதனூலினுற்றாலாடவர்தம்மோடாடிக்
களிமனக்குள்ளாற்றுங்கள்விளைத்திடுங்கலவியெல்லாந்
தெளிதரமாடந்தோறுஞ்சித்திரந்தன்னிற்காட்டி
யிளையரைமயக்கிககாமமேற்றுவோர்சேரிமல்கும். ௪௯

வரியளிமுரலாவாடாமாலையவிமையாநோக்க,
தரைமிசைத்தோயாத்தாளசித்திரந்தயங்குகாட்சி
வரைவிலாமகளிரின்னோர்மாணலம்வேட்டுவானிற்
சுரர்களுமெய்திச்செவ்விபார்த்துறைதோற்றமொக்கும். ௫௦

பூத்தபினிராறுநாளுங்கிழத்தியர்ப்புணர்ந்துதம்மை
நீத்தனரெனுஞ்சீற்றத்தானின்றவீரொன்பானு
மேத்துமாடவரைத்தங்களிளமுலைத்துருக்கமேற்றிப
பாத்திருநிதியமெல்லாம்பறித்தனர்கொள்ளைகொள்வார். ௫௧

கோலத்தினிசையின்யாணர்க்கூத்தினினுவிநயத்திற்
சீலத்திற்கலவிச்செய்கைத்திறத்தினிற்பிறவாற்றானு
ஞாலத்துமைந்தர்தம்மைமருட்டிநற்பொருள்கள்வவ்விக்
காலுற்றசாற்றுவேழக்கோதுபோற்கழியநீப்பார்.

அலகினல்லறஞ்சூழ்காஞ்சியமர்பெருஞ்செல்வராயுங்
குலமுறைச்சார்பால்வெங்கோய்க்கோட்பட்டாரிழிஞரேனுஞ்
சிலகொடுப்பனவுங்கொண்டுசேர்ந்துபொய்வஞ்சமெல்லா
நிலைபெறவடைத்துவைத்தநெஞ்சினராகிவாழ்வார். ௫௩

முலைவிழிக்கணிகைநல்லாராடவர்தமக்குநல்கு
மிலைநிகரெனுமின்பத்திற்கின்பமுஞ்சமமாக்கொண்டு
விலையெனநிதியுங்கோடல்வியப்பிற்றேயேற்றமாக
மலைநிகர்தனங்களீந்தோர்மலைநிகர்தனமுங்கொள்வார். ௫௪

தவமறைக்கிழவன்மாயன்றானுமென்றிவருமிவ்வூர்க்
கவர்மனப்பரத்தைமாதர்கண்வலைப்பட்டேயின்று
மிவறியவல்லரோன்மாலோரப்பித்தனென்றிப்பேர்பெற்றா
சிவசிவயாவரேயோரிவர்நிறத்தகப்படாதார். ௫௫

விற்றிடுமல்குறன்னையீளவுந்தாதேயாக்கி
மற்றையநாளும்விற்கும்வரைவிலார்வீதியிச்சி
கற்றிலாவணிகமாக்களாவரைக்கவினைநோக்கிப்
பற்றுவெண்டாளக்கோவைபத்தியாற்பிரிக்குழன்றே. ௫௬

இருமைவாணிபத்திற்கூட்டத்தமரியருமிறும்பூதெய்த
வருவமாமின்பந்தன்னையிம்மியினளவுமேரு
வுருவமாம்பொருளுக்கேற்பநிறுத்துவிற்றுழகவல்ல
திருமனப்பெண்மார்தம்முட்டருகிவாழிருக்கையீதால். ௫௭

ஆவணவீதி.

இன்னவிங்குளவோவென்னக்கடாதலுமியம்பியோர்சட்
கன்னவிங்குளவில்லென்றிறுத்தலுமறியாதியாரு
மென்னவுங்கருதிரென்னவிலைகொடுத்தேற்பவிய
மன்னியெப்பொருளுமென்றுநிறைபாழாவணமனந்தம். ௫௮

செய்வினையனைத்துந்தன்பாற்சேர்த்துவைத்துயிர்க்குப்பின்னா
ரவ்விறையாணையாற்றூலளித்திடுமாயையேபோற்
கொய்வளம்வருவமுற்றுங்கொண்டுபின்னுயர்மாறப்
பௌவநீருலகுக்கெல்லாமுதவுவபைம்பொன்மாடம். ௫௯

அணங்கனார்பரப்பிவிற்குமணிகிளர்கோங்கந்தாரிற்
சுணங்கினைக்கணியென்றஞ்சிச்சுரும்பினமுறுமைநோக்கிப்
பணங்கிளர்பாந்தளல்குற்பாவைமீரன்னேபொற்பூ
மணங்கமழ்கின்றதென்பாராடவர்மருட்சியெய்தி. ௬௦

வீழ்பொருளெடுக்கலாற்றுவுறுசனமிடைந்தவீதித்
தாழ்குழன்மடவார்வைடந்தர்தங்களுண்முட்டுங்காலைக்
காழ்மணிமுலையுந்தோளுங்கலந்துறவுவகைபொங்கி
வாழ்நருஞ்சிலரேபல்லோர்வாடிநைந்தழுங்குவார்கள். ௬௧

கலிநிலைத்துறை.

நெருங்குபல்சனமுழக்கருக்கூலநீள்விடத்தைக்
கரந்தகம்பர்மேற்றெழித்துறுங்கடல்பெருந்தெருவாய்
சுரந்துவந்துகாற்புறத்தினுஞ்சனமிகத்தொகுவ
பரந்தவீரையுட்புகுந்திடும்பற்பலநதியே. ௬௨

மற்றைய வீதி.

அறத்தினீணகர்புவனேசக்கரமெனவூன்ற
திறத்தபொன்மதிலேழுடைச்சின்மயக்கோயிற்
புறத்துவான்மிசைப்புலவர்கண்ணூறுபட்டிடாமை
மறைத்தெனக்குயினுரிஞ்சுறும்பந்தர்சான்மருங்கு. ௬௩

மகரப்பொற்குழைப்பிரான்றளிசூழ்மதில்குறடு,
நகரச்சிரெயில்சுற்றுமாளிகைநிரையாருந்
திகழச்சூழ்தெருவீதியிடைவெளியுமாய்ச்சிவன்றேர்ச்
சகடத்தேருடைச்சகடமற்றொன்றெனத்தயங்கும். ௬௪

சரிக்குங்குஞ்சரமதப்பெருங்கலுழியுந்தளவைச்
சிரிக்குமூரலார்களைந்ததார்நறவமுஞ்சேறாய்
விரிக்கும்வீதியிலடிவழுக்காவகைவெயிலைப்
புரிக்குஞ்செம்மணிபதித்துமேனடப்பராற்புரியோர். ௬௫

ஞெள்ளற்பாங்கரினறியநீர்வண்டலாட்டயரு
முள்ளற்சேறுகள்புலர்த்துவானிடையிடையகழ்ந்து
பள்ளத்தாற்சிறுகால்பலவகுத்தெனப்பிறங்கும்,
வள்ளற்காவலர்செலுத்துதேர்ச்சகடுபோம்வழியே. ௬௬

செய்யதிண்புயத்தெழிலினைக்கவர்ந்தமைதெரிந்து
வெய்யமாந்தர்கள்வெதும்புறப்பன்முறைதாக்க,
வையவோவெனவலறுவபோலணிமுழவ
மையவேலையுஞ்சமழ்ப்புறவயின்றொறுங்கறங்கும். ௬௭

விலாழிநீருமொண்சந்தனவிரைச்செழுஞ்சேறும்,
குலாயவீதிகால்வழுக்குமென்றஞ்சுபுகோண
னிலாமுடித்தவர்திருவிழாத்தொழவந்துநெருங்கும்
வலாரியாதியோரடிபடியுருவகைநடப்பார். ௬௮

புரசைத்திண்களிறுலாத்தரும்பொலஞ்சுடர்மறுகிற்
பரசப்போதருமன்னவர்பணிமுடிநெருக்கி,
னரசப்பன்மணிதெறித்துவீழ்ந்திமைப்பன,வியா
முரசப்பேரொலியதிர்ப்பினிலுக்கமூதுடுப்போல். ௬௯

அங்கண்வீதியினணிநலங்காணுமாதரத்தி
னெங்கணுதனுந்திருவிழாவென்பதோர்பெயரான்
மங்கையாளொடுமகாரொடும்வானவர்பழிச்சத்
திங்கடோறெழுந்தருளுமேவுதன்வளஞ்சிறிதோ. ௭௰

மாளிகை.

பாலியேமுதல்பலநதித்திவலைபாய்ந்தழகின்
பாலவாயமாளிகையடித்தலத்தினைப்பாராப்
பாலவெண்சுதைமாடமேற்சிகரமும்பனிவிண்
பாலியாற்றுநீர்த்திவலைகள்போர்ப்பவான்படரும். ௭௧

பன்னிறப்பரிகருங்கரிதொழிலமைபவீரே
ரின்னகீழ்நிலைவாயிலினியங்குதனோக்கி,
மன்னுமேனிலைவாயில்வெண்கரிபசுமான்றே
ரன்னவேனவுந்தன்னிடத்தியங்கவானணவும். ௭௨

அலங்குகீழ்நிலைமாடமங்கடுப்பினின்மாட்டு
மிலங்ககிற்புகையான்விரையேற்றுவர்மடவார்
புலங்கொண்மேனிமேன்மாடமும்புரிகுழற்கூட்டுங்
கலங்ககிற்புகையான்மணங்களுழ்ந்தொகுப்பார். ௭௩

இருசுடர்ப்பெருஞ்சிலைகளினியன்றமாளிகைக
ளுருகுவெங்கதிர்தடவரச்சுடுகனலுமிழு
முருகுதண்கதிர்தடவுரக்குளிர்புனலுளிக்கு
மருவினோர்குணம்பிடிபட்டல்வையகத்தியல்பே. ௭௪

நெறித்தகூந்தலார்மேனிலைச்சாளரக்கதவு
திறத்தலுந்நடைபடுமகிற்புகையெலாந்திரண்டு
புறத்தினேகுவவழுதிதன்சிறைப்படும்புயல்கண்
மறித்துவிட்டநாள்விரைந்துவிண்சேறலைமானும். ௭௫

தெரித்தபன்மணிமாடமேற்றிகழ்ந்தபொற்குடத்து
விரித்தநல்கதிர்க்கடவுணின்றசைதல்வேட்கோவர்
திரித்துவிட்டசக்கரமெலாகுழத்திகிரி
புரித்தபச்சைமண்ணெனலாமதற்பயில்களங்கம். ௭௬

நிரவுநித்திலத்தோரணச்செழுங்கதிர்நிரைகள்
விரவிவிண்ணெலாம்வெள்ளொளிவிரித்தலானன்றே
பரவைமேலெழும்பொழுதும்வீழ்பொழுதுமல்லா
லிரவிமண்டிலச்செவ்வொளிவிளங்கிடாவியல்பே. ௭௭

திங்கள்செங்கதிராளமென்றுரைப்பதேதேற்ற
மங்கணித்திலத்தோரணத்தொளியினிலரிபோற்
றங்கிவெண்கதிராயினதற்குறுஞ்சான்று
துங்கமாலையுங்காலையுஞ்சிவந்துதோன்றுவதே. ௭௮

அணங்கனார்நகைததிரும்பொதாறுமாங்கவர்வளர்த்த
கணங்கொண்முலலைகண்மூக்கைப்பனவவர்நகைக்கவினே
யிணங்கிநாங்கவர்ந்தொளித்தமையறிந்தனரென்றே
வணங்கிநாணினலுடன்சிரித்திடுவதுமானும். ௭௯

ஆடகத்தியன்மேனிலைமிசையணங்கனையார்
மாடகத்தனியாழிசைக்குவந்துறும்வான
நாடகத்துவெண்களிற்றினைநளினமென்மலர்ப்பூம்
பாடகத்தடிநடையினாற்பிருவரீலுறுப்பார். ௮௦

பளிக்குமேனிலத்தங்கலார்பணைமுலைநெருங்கக்
களிக்குமாடவர்தமைத்தழீஇக்காமப்போர்க்கலவி
விளைக்குமாற்றலைக்குரவினிலவிழைந்தவனெருசா
ரொளித்திருந்துகாண்போனெனச்சுருங்கையுளுமையும். ௮௧

மேனிலத்தரமியத்திடைத்துயிலுமெல்லியலா
ரானனத்தெழில்கவர்ந்துழிசென்மதியினையவர்தங்
கானலர்க்குழற்காரளியின்றொடர்ந்தகைப்ப
வீனமுற்றவத்தழும்புவான்கறையெனவிலங்கும். ௮௨

உங்கண்மாதரார்முகத்தெழினோக்கியோர்வடிவங்
கங்கணன்குளான்படைத்ததிலவயவங்காண்பா
னங்கண்முன்னுறவகுப்புழியஞ்சனக்குலேயப்
பங்கமுற்றதென்றெழுதித்ததைமதியெனப்பகர்வார் அக

இவ்வரைப்பினிலிரவியுமதியுமும்வழியே
செவ்வனேகுருதொதுங்குவவிவர்முகச்சீர்க்கும்
பவ்வநேரகலல்குற்கும்வடிவொடுப்பீணத்தே
ரொவ்வுருமைகண்டிட்டுகொளுமுட்கினலன்றே. அச

தங்கள்வாண்முகமதியெனச்சார்தரும்பணிக்குத்
துங்கமாடமேன்மின்னனுர்வேற்றுமைதோற்றத்
திங்கண்மாட்டிறிகுறியொன்றுசெய்துவைத்தனரா
லங்கண்மாநிலங்களங்கமென்றிடப்படுமதுவே. அரு

மறைந்திடாமறுப்பயின்மதிமுகத்தெழில்பெருது
குறைந்துபார்க்குமங்கரிவைமார்கோணுதல்கடுப்ப
நிறைந்துபார்க்குமீண்டவர்முகநிகர்ப்பமற்றிவ்வா
றறைந்ததிங்கடோறலமருமக்கரைப்பசுப்போல். அசு

கதிர்செய்மாடமேற்புலவிதீர்கலவியின்முடிவின்
வெதிர்செய்தோளியர்கொண்கர்தம்மருமமேல்வதனம்
பதியவைத்தனர்துயிலுவரற்றம்பார்த்திருந்து
புதுமுகத்தெழிலுடுபதிவெளவுறுப்பொருட்டே. அள

தேங்குமூடலின்மாதரார்பறித்தெறிசெங்கே
ழோங்குபன்மணியவரடிவருந்தினைந்துளோா
வாங்குநாடொறும்பைதுறுத்தவிர்வனகொடிதாத்
தாங்கள்செய்வினைதங்களுக்கேபகையாமே. அஅ

விருந்துநாடொறுமிடையறுதெதிருமேதகவா
லருந்திறற்சிறுபுதல்வர்சூழ்ந்தணுகிடுந்திறந்தான்
முருந்துமூரலார்க்காயிடைகடுப்புமூநர்பான்மூண்ட
மருந்திலூடலுஞ்சிறுவரையன்றிமேவாதால். அசு

மேனிலத்துவந்துலாயிடுங்கடவுண்மெல்லியலார்
தாழ்நிலத்துறுங்கூவல்கணேக்கிநந்தமைப்போற்
கீழ்நிலத்தவர்தாமுமிங்கெய்தினர்கெழீஇப்போ
மூழ்நிலைத்தபல்பிலங்கொலாமுவையெனவியப்பார். கூ0

கலிவிருத்தம்.

காலமன்றிக்கனிவுறமாதனைக்
கேலவான்புகையேற்றுதல்போன்மினர்
சாலவெம்முலைச்சாந்தம்புலர்த்திடு
நீலதூமங்கிர்ந்தெழுமெங்கணும். கூக

கொன்னும்வார்குழற்கூட்டுங்குறுஉப்புகை
யங்கலாரைப்பொதிவதவர்தமைத்
தன்னினீங்கியமின்னெனத்தண்முகி
லுன்னிவந்துவளைந்திடலொக்குமே. கூஉ

வார்கொள்கொங்கைமலர்க்கணையேறிடு
மோர்கொடாய்யிற்கருப்புவில்லேந்துவார்,
தார்மலர்க்குழனரியர்தாங்கடாம்
வீரவேள்பணியென்றறிவிப்பபோல். ௯௩

நாறுதோட்டுகளினமிரண்டினின்
மாறிமாறிவீழ்வண்டினமாமெனக்
கூறுமாதர்குழ்இயிருந்தாடுசி-
ரேறுமம்மனைப்பாட்டிசையெங்கணும். ௯௪

தங்கள்பண்மொழிக்கொக்குந்தகைமையை
யங்கணுப்பவரேய்ப்புவணிமலர்ச்
செங்கைமெலவிரலமேசர்த்தித்திவவியா
ழெங்குமங்கையர்பாடுவரெண்ணிலார். ௯௫

வேறு.

கொங்கையினெதிருறககூசினுமெலனப்
பொங்கொளித்தாளம்பினனெலிப்பப்பூவைமார்
மங்கலச்சதிநெறிவழாமலாடரங்
கெங்கணுநாபுரத்திசையினீட்டுமே. ௯௬

மைந்தர்பந்தெறிதலுமாடப்பித்திகை
சிந்துவபன்மணிசெழியன்செண்டுடுத்
துந்தியன்றேமச்சிழிலப்பிலாயிதி
தந்திடும்வடதிசைச்சாரற்குன்றுபோல். ௯௭

மணிப்பொலமுட்சிருர்விடுக்கும்வான்படந்
தணிநதொறுமவிடுந்தொறுந்தணிந்துநீளவுடு
கணிப்பருநந்திநெட்டுயிரபயின்காற்றிடைப்
பணிப்பகைமுனைவுமுலபரிசுகாட்டுமே. ௯௮

மாடமேற்சிறுமகார்விடுகரும்வண்படம்
பாடலசாலிருகடர்தம்மைப்பற்றுவா
ரூடினதிரிதருநாகமென்னவு
மாடுவவிசும்பிடையமரர்நோககவே. ௯௯

அட்டிலிற்குய்ப்புகையணங்கனார்குழற்
கிட்டிடுமகிற்புகைமகதமெழும்புகை
முட்டியேற்பரந்தெங்குமொய்த்தோரிலார்
வட்டவான்செழும்புகைவண்ணமென்பரே. ௧௦௦

வேள்விச்சாலை.

இந்திரனார்இயிய்தெய்தித்தன்முடிச்
சுந்தரஞ்சிதைதரத்துதையச்சிறித்தன்
மந்திரப்புகையினல்வலாரியூரெழில்
சிந்திடச்செய்வசீர்வேள்விச்சாலையே. ௧௦௧

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆகுதித்தழலினறுதொழிலாளருமறைமனுவெடுத்தோதி
யோகையிற்சொரிநெய்தெறித்தெழும்பிதிர்வுமொலிபடுபுலிங்கமுங்கொண்டு
மேகமாய்ப்படர்ந்ததூமமேயிடித்துமின்னிசேர்பொழிவனபோலு
மீகைசால்வேள்விமறுத்துழிமாரியின்மையேயிதற்குறுசான்றால். ௧௦௨

அந்தணரிருக்கை.

பூசுரப்பெயரினிருமொழிப்பொருட்குமுரிமைபூண்டுறுநிலைக்கேற்பக்
காசினிவரைப்பினுடொராமுவழாதுகமழ்சுவையடிசிலானதிதி
பூசையும்வேள்வியவியினுற்கடவுட்பூசையுமொருங்குசெய்கடப்பா
டாசறவாற்றும்பார்ப்பனவாகையறிஞர்வாழிடம்பலவீவண. க0ங

அரசரிருக்கை.

தகைபெறுவலியாற்றெம்முனைமுருக்கிக்காவற்சாகாடுகைத்தெங்குந்
திகிரியொன்றுருட்டிமுறையுளிசெங்கோல்செலுத்துநர்கள்வர்மற்றுயிர்கள்
பகைவர்தாந்தமரென்றிவ்வயினெய்தும்பயந்தடுத்துலகெலாம்புரக்கு
மிகுபுகழ்படைத்தவரசியல்வாழ்க்கைவீரர்வாழிடம்பலவவண. க0ச

வணிகரிருக்கை.

மேதகுவிரிஞ்சனரும்பெறற்குறங்கைவிழைதகையாமெனப்படைத்தோ
ரேதிலர்பொருளுந்தம்மபோற்பேணிவாணிபமீட்டுநர்வடாது
மாதிரத்தலைவன்புறங்கொடுத்திரியும்வளத்தினர்மறைநெறியொழுக்க
மாதரித்துயர்ந்தவிழுக்குடிவணிகரமர்ந்துவாழிடம்பலவவண. க0ரு

வேளாளரிருக்கை.

முருகுயிர்த்தலர்ந்தமலரவன்றனதுமுகமுதலுறுப்பெலாந்தாங்கிச்
சரணமென்றுரைக்குமுறுப்பினிற்றேன்றிச்சாற்றுமம்முகமுதலுறுப்பின்
வருமொருமூவர்தங்களையுழவின்வண்மையானிலைபெறத்தாங்கு
முரியவேளாண்மைபூண்டபேர்தமககேயுடையவரிடம்பலவவண. க0சு

அனுலோமர்முதலியோரிருக்கை.

நால்வகைவருணத்துயர்குடிப்பிறந்தநலலவரிருக்கையைச்சூழ்வ,
சால்புறுபவரிலுயர்ந்தவரிழிந்தோர்தங்களுட்புணரிமணந்தளித்த
பால்படுமேனச்சாதிபேதத்தோர்பலர்களுந்தத்தமநெறியின்
சீலராய்த்துவன்றிமரபுளியொழுகுந்திருமலிபலவகைக்குடியே. க0எ

கழகம்.

வளரிலைத்தருப்பைநுனியெனக்கூர்த்தமதியினர்தொன்றுதொட்டுடைய
பளிக்குறுகேள்விப்பயிற்சியர்மேற்கோணமுதற்பகாமூன்றினுந்தெருட்டி
யிளையருக்குணர்த்துமிலக்கணநெறியோரிருபுலமையர்தம்முட்
களவிகலிகந்துகுழாங்குழாமாகிக்கலைதெரிகழகமும்பலவால். க0அ

சைவமடம்.

காமனைமுனிந்துநெடுஞ்சடைதரித்துககவின்றகல்லாடைமேற்புனைந்தி
யாமெலாம்வழுத்துந்துறவியென்றிருந்துமொருத்திதனிளமுலைச்சுவடு
தோமுறக்கொண்டாரெனச்சிறையிடல்போற்சுடர்மனக்குகையுளேகம்பத்
தோமொழிப்பொருளையடக்கியானந்தமுறுநர்வாழிடம்பலவுளவால். க0கூ

திருக்கோயில்.

இருண்மலந்துமிக்குஞ்சிவாகமமுறையினீரிருபாதமுமுனுட்டித்
தருள்பெறுமாதிசைவர்களாதியவாந்தரசைவரீறுனோர்
மருவிவீழ்மாடமாளிகைப்பத்திமருங்குடுத்துயர்வனப்பினதாற்
றெருட்டுமுனிசைவர்வீற்றிருக்குந்திகழ்காஞ்சிப்புரிசையேகம்பம். கக0

## திருமதில்.

### கலிவிருத்தம்.

விண்ணழிவுறுநீயிர்விழைடக்குவா
னண்ணலானையினிமிலூர்தியாண்டுநீஇ
யெண்ணிலவுருவுகொண்டிருந்தநீரதே,
பண்ணமைமதின்மிசையிடபப்பந்தியே. ககக

### திருக்கோபுரம்.

ஒன்பதுதோள்களுமுலாவிலைகுவா
னொன்பதுபாடமுங்கூழிற்செய்தென
வொன்பதுமணிகளினியன்றவொண்மைசா
லொன்பதுநிலைதழீஇயோங்குங்கோபுரம்.

கார்முகிலுடுக்கையாங்கதிரின்வாளவன்
மார்பணிமணியதாவட்டயாமதி
சீர்நுதற்பூதியாச்செலவக்கோபுரம்
பார்புகழ்புருடனிலோங்கும்பான்மைத்தே. ககங

நச்சியேகம்பரைத்தொழுதுநாடொறுங்
கச்சியில்வாழ்பவர்புகுதிங்காலையி
லச்சிவலோகத்தையணுகவைத்ததோர்
பொச்சமிலேணியும்போலுங்கோபுரம். ககச

பரிதியினிழல்செயக்கதிர்க்கும்பன்மணித்
திருவியல்கோபுரச்செல்வவாய்தலின்
முரசுகாலந்தொறுமுழங்குஞ்செவ்வியென்
றொருகுறுவமரரையழைத்தன்மானவே.

### விடைக்கொடி.

மடுத்தவைம்பாசமூவரணமைந்தனும்
றடுத்தருள்கோயிலிற்றம்பிராதொழி
றெடுத்தபூங்கொடிமிசையிடபம்வான்மிசை
யடுத்தோரிடபத்தோடளவளாவுமே. ககசு

### விமானம்.

தங்குலத்திறைவிசெய்பூசைச்சால்பினை,
யங்கணன்மகிழ்வொடுங்காணுமாசையி
னெங்குளவரைகளுமீண்டினவெனப்
பொங்கெழிற்சிகரங்கள்பொலிந்துதோன்றுமால். ககஎ

### மண்டபம்.

கன்மநோய்க்குடைபவர்கடப்பச்செய்திடும்
பன்மலர்துவன்றியதீர்த்தப்பாங்கரிற்
பொன்மலர்மண்டபம்பொலிந்துதோன்றுவ
தென்மணிப்பேழையைத்திறந்ததொடுபோல். ககஅ

**வேள்விச்சாலை.**

*அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.*

சேந்தபொற்குண்டத்தோங்குஞ்சிகைத்தழன்மிசையேகம்ப
வேந்தையாவாகித்தேத்தும்புகைபொதிவேள்விச்சாலை
யேய்ந்தசீர்த்தகரவித்தைமுறைப்படியிதயகஞ்சப்
பூந்தழற்சிகைமேலீசற்போற்றுமாயவனையொக்கும். கககூ

**மாமூலத்தானவர்.**

கோமுன்றாகாம்பரச்சாகைவட்டமேற்குடையாப்பொற்பின்
வாழியவொருமாமீதுவளங்கிழல்கவிப்பவாங்க
ணாழ்முறையுயிர்கட்கெல்லாமைந்தொழிலோம்பியெம்மா
னூழ்புனலுலகமேத்தவீசுவீற்றிருக்குமன்றே. கஉ0

பற்பலதேயமெல்லாம்பாங்குடைத்தொண்டைநாடு
பற்பலசங்கநாப்பட்படர்வலம்புரியாமங்கட்
பற்பலநகரமெல்லாம்வட்டமாப்படைத்தகாஞ்சி
பற்பலவலம்புரிக்குட்சலஞ்சலப்பணிலமாமால். கஉக

அத்திருக்காஞ்சிவைப்பினலகிலாத்தலங்கட்முட்
பத்திசேர்மாடக்கம்பம்பாஞ்சசன்னியமாமங்க
வுத்தமச்சுரிமுகத்துள்விலைவரம்புணராச்சாதி
முத்தமேயொருமாமூலத்திருந்தருணமுக்கண்மூர்த்தி. கஉஉ

பன்மணிவெயிலகள்கான்றுபடரிருள்சீப்பவட்டப்
பொன்மதில்சூழ்ந்துநாப்பட்சதாசிவப்புத்தேள்வைகுந்
தன்மையாற்கச்சிமூதூர்தரைமிசையுயிர்கள்செய்த
கன்மமோர்ந்தளிப்பான்வந்தகதிர்செய்மண்டிலமேயாமால். கஉங

விலக்கிலாவறநூல்சொன்னமுனிவரும்விதிவிலக்கா
மிலக்கியமிதன்பாற்கண்டேயிலக்கணம்விதித்தார்போலு
மலக்கணீத்தறமெண்ணான்குமம்மையேவளர்க்குநீராற்
கலக்கமிலறங்கட்கெல்லாமாகரங்காஞ்சியன்றே. கஉச

உவரிசூழுலகவைப்பினுமையமைகேள்விசான்ற
கவிகளென்றுரைப்போர்தம்முட்காஞ்சியைப்புகழாரில்லை
யவரெலாம்புகழ்ந்துமின்னுமுலப்புறுவதன்சீர்முற்றுஞ்
சிவநிறைகல்விசாலாச்சிறியனோகிளக்கவல்லேன். கஉரு

இத்திருக்காஞ்சிவைப்பிற்பலதளியிடத்துமேவி
யத்தகுகம்பவாணரவரவர்க்கருளிச்செய்த
வுத்தமக்காதையெல்லாஞ்சூதனன்றுரைத்தவாறே
முத்தமிழறிஞர்தேறமொழிபெயர்த்துரைப்பேனுய்ந்தேன். கஉசு

திருநகரப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உகூஅ.

# பதிகப்படலம்.

## முதற்காண்டவுட்டொகுதி.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிவபரஞ்சுடரைக்காண்டகுமேதுச்செய்தவர்வினவியவாறுந்
தவலருஞ்சிறப்பினந்தியெம்பெருமான்சனற்குமாரனுக்குவெஞ்சாப
நவையறத்தருளிச்செவியறிவுறுத்தநலமெலாஞ்சூதமாமுனிவ
னவர்தமக்கியம்பிப்பின்னுஞ்சுகனுமையாட்கருளியவுண்மைசெப்பியதும்.

கன்னியாழ்க்கிழவன்வரம்பெறுகாரைக்காட்டினிற்பூசனையுஞற்றி
பின்னவிர்மணிப்பூஞ்சிவிகையினூர்ந்தவான்வீடுபேறெய்தியவாறும்
பொன்னுடைப்புதேள்புண்ணியகோடிப்புனிதனையருச்சனையாற்றி
யின்னவேறுகைக்குமண்ணலோடிலகையுண்டுமீட்டுதவியவாறும்.

அக்ககுமாரயோன்வலம்புரிக்கழிற்றுறையடியிணைவணங்குபுகனது
கைத்தலத்திழந்ததெம்மருள்சிலைப்பாங்கதிர்வளைதனைப்பெறுமாறு
மெய்த்தவரோன்பின்மலர்மிசைக்கடவுள்வேள்வியிசெய்துயர்சிவாக்கான
தத்தமனருளான்மாயனோடிலகையாண்டுமீட்டுதவியவாறும்.

கருகிருள்விடத்தையிறையவன்பருககாட்டியவுறக்கடைதணப்ப
விருமறைவிதியாற்கடவுள்மணிகண்டேசனையேத்தியவாறு
மருளுறுசெருக்கிற்பொய்யுரைகிளந்தவல்வினைகழிதரவியாதன்
பொருவருஞ்சாந்தாசயப்பெருவரையிற்பூசனையியற்றியவாறும்.

வீட்டினைவிழைந்தேழ்முனிவரும்பூசைவேறுவேறியற்றியவாறுங்
கோட்டமில்கொள்கைப்பராசரமுனிவன்றிருமுதுகுன்றமர்
மாட்டியவரக்கன்குலந்தொலைவியாச்செற்றதும்விளக்கொளிமாயோ
னுட்டமூன்றுடையநாதனைப்பரவிநிதிதுதோற்றியவாறும்.

ஈண்டியபுகழ்முதுதீச்சரம்பரசிமின்றுவள்நெறையினைவிடுவித்
தாண்டகைக்கழுமலஞ்சுபிலலயிற்றப்பணிகளையலத்தெழுமாறு
நீண்டவனுணராதிருவடிபோற்றிவெளியுடப்பணிகளுமெழுமுமின்
பூண்டுகொண்டருளப்பெற்றமோதகவாற்புள்ளினைவினவியவாறும்.

இந்திநாளிருவர்காயமேற்றுங்கியியாழுமுதியமறும்வழுத்த
மறுவறுகாயாரோகணவரைப்பினெம்பிரான்பன்னியவாறு
மறுதணிவேணிமுக்கண்ணீசுடத்துரம்பரிணையருச்சனைசெய்து
தெறுபுலனவித்தசித்தரொண்ணரியசித்திபெற்றுய்ந்திடுமாறும்.

மாதவன்பரசிப்பிருகுவன்சாபவன்பயந்தப்பெறுமாறு
மேதகுமொருசார்முனிவரர்மதங்கன்வெண்கரிபோற்றியவாறு
மேதமில்வெள்ளிமொழிப்படித்ததீசியிட்டசித்தீசனைத்தொழுது
கோதறுவயிரயாக்கைபெற்றோங்கிக்குபன்றனைப்புறங்கண்டவாறும்.

அந்தணன்கச்சபாலயத்திறைஞ்சிப்படைத்திடுமாற்றல்பெற்றதுவும்
பைந்துழாய்க்கூர்மமாயிடைப்பரசிப்பாதகந்தவிர்ந்துய்ந்தவாறு
மைந்துறுமாண்டுக்கன்னிமாமுனிவன்வழுத்திவானரம்பையரைவர்
சந்தன்றிளைக்குமிளமுலைப்போகந்தரைமிசைநுகர்ந்துவாழ்ந்ததுவும்.

அங்கியங்கடவுளேத்திவிண்புலத்தாரவிப்பொறைமதுகைபெற்றதுவும்
பங்கமின்றிறைஞ்சிச்சவுனகமுனிவன்வீட்டினைத்தலைப்படும்பரிசு
மங்கருவெப்புவிழியவற்செகுத்தசுரகரம்வானவர்வழுத்திப்
புங்கவர்பெருமான்சுக்கிலம்பருகுவெப்புநோய்போக்கியவாறும்.

புலிப்பதமுனிவன்கான்முளைபோற்றிப்பொங்குதீம்பாற்கடல்பெற்று
வலித்திறற்பார்த்தன்வலவனேமுடிமேன்மலரடிசூட்டியாண்டதுவும்[யிற்
கலித்தெழுழிமையோர்மலைமகண்மொழியாற்கரிசறத்தெளிந்தருட்குறி
சலிப்புறுழியக்கவிழ்வுகொண்டணைந்ததலைவனைத்தொழுதுய்ந்தவாறும்.(2

ஏதழில்பதிற்றுப்பதின்மரோடிரொன்பதின்மருமேத்தியவாறு, (23)
மாதர்மேற்றளியிற்கவுணியன்பாட்டான்மாலசிவனுருவுபெற்றதுவு (24)
மாதரம்பூப்பனிவங்கரப்புத்தேளனேகதங்காவதம்பரசிக்
கோதறவுலகமெண்ணியாங்குதவக்கொடுத்திடுழிறைமைபெற்றதுவும்(25

மகதியாழ்முனியும்புத்தருக்கிறையும்வளம்பொழிற்றிருக்கயிலாயப்
பகவனைத்தொழுதுமுப்புரத்தவரைமருட்டியபாவமாற்றியது (26)
மிகலுநர்ச்செகுப்பவிராகவன்வழுத்தியெறுழ்வலியெய்தியவாறும் (27)
புகழுறுங்கற்கிபோற்றுபுகடைநாட்கயவரைப்புரட்டியவாறும். கக

நறைமலர்ப்பனந்தார்முடியவன்வழுத்திநலம்பயில்வரம்பெறுமாறு (28) [து
முறைகழன்மகவான்றொழுதுசெல்வுருவாயசுதன்சென்னியைத்துணிக்
கிறைபெருங்கீர்த்திகவர்ந்துபீடுய்யப்பூசனைநிகழ்த்தியவாறு (29)
மறையவன்றலையைக்கொய்துவெம்பலிதேர்வயிரவன்பூசித்தவாறும். கச

விண்டுநேர்விடுவச்சேனனும்பரவியீரபத்திரனிறத்தணிந்த
வெண்டலைவிழுங்குமாழியைமீகாட்க்கிறைவெய்தியவாறு (31)
மிண்டினல்வேள்வியாறுறியதக்கன்வினைகெடவருச்சித்தவாறும், (32)
விண்டவர்புரத்தினுயர்ந்திடுமூவர்தொழுதுமெய்வரம்பெறுமாறும்.(33)கரு

பொன்பெயர்படைத்தோன்கிளைஞரோடெய்திப்பூசைசெய்தரசுபெற்றதுவுங்,(
கொன்பயில்விடையோனருள்வழிமாயோன்மடங்கலாயவனுயிர்குடித்துப்
பின்புகுந்தருக்கைச்சரபமாய்த்ததற்பின்பிழைகெடப்பூசித்தவாறும், (35)
வன்புடையிரணியாக்கனையிறுத்தபன்றியினவழிபடுமியல்பும். கசு

அந்தகன்பரசிப்புவிமுழுதாண்டுகடைமுறையருள்பெறுமாறும், (36)
வெந்திறல்வாணனிறுதியிற்பரவிவிறற்கணத்தலைமைபெற்றதுவும், (37)
கந்தமென்மலர்கொண்டடிதொழுதோண்காந்தனுங்கதிபெறுமாறு, (38)
மைந்துறவழுத்திச்சலந்தரன்கடைககால்விட்டின்பமருவியவாறும், (39) களஎ

கேசவன்றிருமாற்பேற்றினிற்போற்றிக்கிளரொளியாழிபெற்றதுவும் (40)
வேசறுப்பரசிராமனேத்தெடுத்துவெம்மழுப்படைபெறுமாறும், (41)
தேசுறப்பரவியிரேணுகையென்பாடெய்வதமாகியவாறு (42)
மாசறும்யோகாசாரியர்தொழுதுவயங்குதம்பதம்பெறுமுறையும். (43)கஅ

சித்தசன்போற்றியுலகெலாங்காமஞ்செறித்திடுழிறைமைபூண்டதுவு
முத்தனுரேவலாற்றினலேணைந்தவகிலதீர்த்தங்களும்வணங்கிப்
பைத்தபாப்பல்குல்பாகனுர்தம்பாற்பற்பலவரங்கள்பெற்றதுவும் (44)
தத்துநீர்க்கிறைவனருச்சனையாற்றித்தங்குமப்பதம்பெறுமாறும். (45) ககூ

காசிவாழ்விசுவநாதனுங்காஞ்சிப்பெட்பினைலணைந்துவைகியதும்,
பூசனையுஞற்றிக்காற்றினன்கந்தவாகனைப்பொலிவுறுமாறு,
மாசறுகோள்களொன்பதும்வழுத்தியெண்ணியவரம்பெறுமாறும், (46)
தேசுறுவாமதேவனன்முனிவன்றொழுதுவெம்பிறவிதீர்ந்ததுவும். (47)உ0

இரண்டாங்காண்டவுட்டோகுதி.

மற்றுமோராற்றுற்கிளந்திடுந்திறத்தின்மால்வரைக்கயிலேயினுமையாள்
கற்றையஞ்சடையார்விழியிணைபுதைத்துக்காஞ்சியிற்பூசனையாற்றும்
பெற்றியுமந்தார்வேதியுங்கரிகால்வளவன்கோன்பெருமையும்வினைநோய்
செற்றிடுந்தீர்த்தமுதலியமூன்றின்சிறப்புமீண்டியம்பிடப்படுமால். ௩௭

பதிகப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௭

# புராணவரலாற்றுப்படலம்.

## நைமிசாரணியச்சிறப்பு.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மிடல்கெழுதவத்தோர்வேள்விசெய்வினைக்குவேண்டியவேண்டியாங்குதவப
கடவுளானபயிலுங்காட்சியாலவியூண்கைக்கொளத்துதைந்தவானவராற்
றொடர்வுறுமோமப்புகைதழீஇச்சுரும்பருளர்தராப்பன்மலர்ப்பொழிலா
லடர்தருங்காமர்கற்பகவனமேயாயதுநைமிசாரணியம். ௧

தாதவிழ்கடுக்கைநறுந்தொடைமிலேச்சூழ்ந்தம்பிரானடியலதுணரா
மாதவரியற்றுமகவினைசிதைப்பவருகருந்தயித்தியர்வர்தங்
காதுவெஞ்சாபவலிக்குடைந்தோடுங்காட்சியேகடுக்குமம்மகத்தி
மீதுயர்ந்தண்டச்சுவர்த்தலமுரிஞ்சவிசும்பெழுநறும்புகைப்படலே. ௨

கருந்திரையளக்கரகடுடைத்தெழுந்துகனையிருள்பருகுவெங்கதிரோ
னிருந்தவர்வேள்விக்களத்தவிப்பாகமேற்பவந்தணுகுவோன்மான
மருந்தெனக்கிளைத்துவானுறநிவந்தவளம்பொழிற்கிளைகளைக்காத்தா
திருந்துறவொதுககிகுனிந்துபுக்குலாவிச்சேணிடைப்போய்கிமிராநதுறுமால். ௩

சிறகர்வண்டிமிரும்வட்டவாய்க்கமலச்செழுமபொகுட்டாசவீற்றிருக்கு
மறைமுதல்கிழவன்முனிவரர்வேண்டவளைத்தனன்விடுத்தபுன்னேமி
பிறவுறுதின்றுமாயினையுறைவதெனக்கவின்காட்டிடுந்தேத்தீ
பறைநரச்செறிந்துநறவமுறைறெடுக்குமரும்பெறன்மதுவிருலவலயம். ௪

விரும்பியவிடபந்தாங்குதோற்றத்தால்விளங்கெரியுருவினிற்பூத்த
வரும்பணிகொண்டகாட்சியாற்பெரியவரையவணிருந்தவராக
விரும்புவியுய்யக்கோடலால்யாருமேதகும்பெற்றியாலுலவாப்
பெரும்பெயர்க்கயிலேக்கடவுளேபோலும்பிறங்கொளிநைமிசக்கானம். ௫

இசைமுகனுந்தியுறவளேநேமிசேர்ந்திடுங்கொள்கையாலென்று
மசைவில்வானவர்க்குப்புரையவியமிழ்தமளித்தலாற்பூமணம்பெறலால்
வசைதபுகாட்சிக்கருநிறக்கருவிமழைமுகின்மேனிவந்தழகா
யிசைதலாற்சார்ங்கமேந்தியோனிகர்க்குமிணையிலாநைமிசக்காடு. ௬

குலவுநால்வாய்கண்மருவலாலகலங்கொண்டமுந்நூல்வயங்குதலாற்
சலமற்வேதமொழிதலால்வனத்துத்தாமரையிருக்கைமேவுதலாற்
பலபொறிச்சுடிகைப்பையராச்சுமந்தபாரவைசூழ்புடவியேமுதலா
மலர்தலையுலகமுழுதுமீன்றளித்தவள்ளனைமிசப்புறவம். ௭

மகம்.

எச்சமொன்றேயிருமையினுமேலாமிமையோர்க்குவப்பாவ
தெச்சமொன்றேமகத்திறையாமெம்மான்விழையப்படுவதுவு
மெச்சமொன்றேநனிசாலச்சிறந்தபொருளுமிருங்கரும
வெச்சநிகர்வேறில்லையெனப்பரத்துவாசனியம்பினனால். கஎ

மகவு.

மகவேமேலாங்கதியாக்குமகவானுலகந்தனைவெல்லு
மகவின்மகவான்முடிவின்மையெய்துமகவின்மக்வளித்த
மகவான்மேலைப்பதமுறுந்தென்புலத்தார்கடனைமாற்றுவது
மகவானன்றியில்லையெனவகுத்தான்றெரித்துக்கண்ணுவனே. கஅ

துறவு.

துறவேயறங்களெவற்றினுக்கும்பெரிதாம்விடையூர்தோன்றலுக்குந்
துறவேயுவகைவரச்செய்யுந்துறவேயயன்மாலுலகளிக்குந்
துறவேயீசனிடத்திருத்துமேவருமேலாச்சொல்லுவதுந்
துறவேயாமென்றெழுந்துநின்றுசொற்றான்சைவத்துருவாசன். ககூ

சூதபௌராணிகர்வரவு.

வேறு.

இன்னவாறுபன்முனிவருமியம்பினர்பிணங்குழியிவரிட்டு
நன்னர்வான்றவங்கொணர்ந்தெனவாயிடைநணுகினன்விடையூரு
மென்னையாளுடையிறையடிதைவருமிடையறுத்தியானத்தான்
பன்னுமெய்த்தவப்பராசரன்பயந்தருள்பண்ணவன்மாணுக்கன். உ0

விளங்குநீற்றொளிகதிர்செயவிங்கிருளக்கமாலிகைவீசும்
வளங்கனிந்தபொன்மேனியான்புண்ணியம்வடிவெடுத்தெனவந்தான்
றுளங்குறுதுயர்புராணமுற்றளந்தறிநொலலையோனமரர்க்காக்
களங்கறுத்தவனுண்மைதேர்ந்துயிர்க்கெலாங்கருணைகூர்ந்தருள்சூதன்.

முனிவர்வினா.

புக்கசூதனைமுனிவரர்யாவரும்பொங்கியபெருங்காதன்
மிக்கவோகையினெதிர்கொடுபூசனைவிதியுளிவழாதாற்றிந்
தக்கவாதனத்திருத்தினர்வினவுவார்தறுகணம்புலவாழ்க்கை
யொக்கநீப்பயாமுன்னரேயருந்தவமுஞற்றினமதனாலே. உஉ

வென்றிவெள்விடைப்பிரானடிகாணபதேவீடுபேற்றினுக்கேது
வென்றுதேறினங்காண்பதற்குபாயமற்றிதுவெனத்தெளிகில்லே
மொன்றலாதனவேறுவேறுரைத்தனமுயங்கினமபிணக்குற்றே
மன்றகண்டிலேந்துணிவுமெய்யுணர்வினன்மலக்குறும்பறச்செற்றோய்.

எங்கள்பாக்கியப்பயனெனநீயிவணெய்திடப்பெற்றேம்யாங்
கொங்குயிர்த்ததார்த்துளவனேவியாதனக்குலமுனியருளாலே
பங்கணூலவறுபுராணமுமுணர்ந்தனையறமுதல்பொருண்ணிங்கிற்
பொங்குசீர்த்தியோய்நீயறியாததுபுவனமூன்றினுமில்லை. உச

ஆதலாற்பலநெறியினுந்துணிந்தவாறரன்றிருவடிகாண்டற்
கேதுவெங்களுக்கருளுதிவழிதுநீயேகலையுயர்வானிற்
பாதவம்பொரப்பெரியவர்காட்சியும்பயன்படாதொழியாதாற்,
சூதமாதவவென்றலுமகங்களிதுளும்பியோதுவன்சூதன். உரு

குரவுமாதவியுழிஞைமந்தாரங்குருந்துபாடலம்பாலைமுந்திரிகை
மருதுபோதிபிடாஞெமையோமைவஞ்சிகாஞ்சிகுங்குமநமைபியாடுவா-
ண்ரைதளாவுதிசெருந்திசேவெகினமகில்பலாசஞ்சந்திலலமாவில்லம்
வரைதமாலமாதளேகணியதிங்கம்வகுளமின்னனநெருங்கினவோங்கும்.

அன்றினர்புரமழலெழநகைத்தவண்ணல்சேவடிக்கன்புறுவியல்பிற்
றுன்றுமெய்த்தவயோகியர்க்கெல்லாந்துயகற்றவச்சாலையுமாகித்
தென்றலூர்தரப்பூமணங்கஞலத்தெளிபுனற்சுனையளவிலகவின்று
பொன்றிடாக்கடவுளர்முதலோர்க்குப்போகபூமியுமாயதப்பொருப்பு.

அங்கண்வாழ்தருமயன்மனைக்கிழத்தியங்கொப்பணின்றருந்தவஞ்செயல்போற்
கொங்குலாந்துவர்ப்பங்கயத்திரைதேர்குறிப்பினேதிமசைவற்விருக்கும்
பொங்குவெண்டிரைத்தீர்த்தத்தின்மாடேபுரங்கடந்தவர்வரமவட்குதவித்
தங்குகாட்சியினறுமலர்பொதுளித்ததைகடுக்கைபொன்சொரிவனவுடைத்தால்.

மீதுசந்திரசூரியர்கிரணம்விரவலாமையினொருபொழுதலர்ந்தோர்
போதுகூம்பமச்செய்கையாங்கின்றிப்புரிமுறுக்குடைநசென்றமோரியல்பிற்
கோதில்பன்மணிக்கதிரொளிவருடக்குளிர்ந்தலர்ந்திரண்டவத்தையுங்கடந்து
மாதர்வெண்பிறைக்கண்ணியர்டிசேர்மர்ந்தரொத்துளவளஞ்சுனைமலாகள்.

வென்றவைம்புலவார்ங்கையர்வடிவின்விளங்குபூதியும்விரைகமழ்கடாத்த
குன்றுபோலுயர்களிற்றுநீள்கோட்டுக்குலவுமுத்தமும்வேயுகுமணியுந்
துன்றிவானிலாக்கற்றைகால்வெண்மைதூயபொன்மையைவிழுங்கியதேயோ
வன்றியவ்வரைப்பொன்மையேவெண்மைதனைவிழுங்கியதோவதுவறியேம்.

இனையசீர்பெறுசதசிருங்கத்தினெண்ணிலாப்பெருவளத்தனவாகி
நனைமலர்ப்பொழில்சணபகஞ்சரளநரந்தந்தெங்குகோங்கரம்பைகளுடுத்து
வனசநீள்சுனைமல்கியபிரமவனமொன்றுள்ளதுமற்றதனைப்பட்
டனைநிகர்ப்பதுநான்மறைக்கிழவன்றனமாயதுபிரமமாநகரம். கக

### சனற்குமாரமுனிவர்யோகசெய்திருத்தல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொற்பமரினையநகர்க்கொருபாங்கர்ப்பொங்கொளிமடங்கலேறென்று
பற்பலமடங்கல்சூழவீற்றிருக்கும்பரிசெனத்தவாநீற்றொளியி
னற்புதக்கோலத்தறிஞர்சூழ்ந்தேத்தவருட்சனற்குமாரமாமுனிவ [நாள்.
னற்பணிப்பெருமான்சரணுளத்திருத்தியோகுசெய்திருக்குநாளொரு

வைகறையெழுந்துகங்கைநீராடிவானவர்முனிவர்தென்புலத்தார்
செய்கடனுவப்பத்தெண்புனலிறைத்துநியாசமுந்தியானமுமாற்றிப்
பொய்களைவிரசையுத்தியின்விதியாற்பூத்தநீறங்கையினெடுத்து
நைகரந்தீர்ந்தவன்பொடிகியாசநடைபெறுதியானமுன்னுகை.

அடைவுறப்ஞ்சப்பிரமமந்திரததாலிங்கியென்றற்றொடக்கத்தான்
மொடிவில்சாபாலிமனுக்களேழாற்றுன்மிவிரண்டதர்வமந்திரத்தால்
வடிவுறமிடக்கைவைத்துமுன்முக்கான்மந்திரித்தறவினுற்குழைத்துக்
கழகெழுசென்னிமுதலிடிகாறும்பிரம்மோரைந்தையுங்கழறி.

நிறையவுத்தூளஞ்செய்துபின்றிரியம்பகங்களானிகழ்த்துமஞ்செழுத்தா
லுறவிசைமித்துப்பின்னருந்திரியாயுடந்திரியம்பகமனுவான்
முறையினஞ்செழுத்தாற்புண்டரமொன்றுமுச்சுடர்முக்குணமும்மை
மறைகண்மூவுலகுமுந்நிறமுத்தீவடிவெனச்சிந்தையிற்கண்டு. கஉ

அதுசனற்குமாரன்யோகினில்வைத்தகருத்தினூற்றிந்திவ்ஞனுகிக் [டு
கதுமௌனவிருக்கையெழாமைகண்டெம்மான்கூறுணைகூர்ந்துமையவளோ
விதுவண்ணிசய்வலத்தெம்மையேயுளத்தின்விழைதரவிருத்திமற்றெம்பாற்
பொதுவறவொருக்குமனத்தினனென்னப்புரிவொடுங்கோயில்புக்கனனால்.

சனற்குமாரமுனிவர்சாபமேற்றல்.

நந்தியெம்பெருமானேக்கினன்வெகுண்டுலகிலாவொட்டகமேபோ
லந்திலெம்பிரானையிகழ்ந்திருந்தனைலவ்வுருவாகெனச்சபிப்பச்
சிந்தைகூர்முனியுமொட்டகமாகிச்செழுநிலத்துழிதருகாலை
முந்தைஞான்றியற்றுநல்வினைப்பயனுன்முன்னினன்கச்சிமாநகரம். ௨௭

பிரமன்கச்சபேசரைப்போற்றல்.

ஆயிடைக்கச்சபேசனுழிறைவனமர்ந்தருள்கோயிலின்மாடே
காயுமைம்பொறியினுலகெலாம்படைக்குங்கருத்தினன்மலரணைப்புத்தே
நீயுமாதவத்தினினிதுவீற்றிருக்குஞ்சூழலினணுகலோடுந்
தீயபாவத்தினொட்டகவடிவாஞ்சிறுவனைக்கண்டனன்றாதை. ௨௮

பாவடிநெடுங்காற்றிரையெழுதோல்வாய்ப்பழியுடனொளிந்துநீள்கழுத்தி
யாவருமிழிக்குமொட்டகயாக்கையிளவலைநோக்கிநின்றந்தோ [ன்
சேவுயர்கொடியானடித்தொழும்புாற்றுந்திருவருட்குரியனுமிவனுக்
காவவென்செய்கோவென்மகற்கிதுவந்தடுத்ததெவ்வாறெனவெண்ணி.

யோகினைக்கூடிமுன்னிகழ்வனைத்துமுணர்ந்தனனவ்வினைதவிர்ப்பா
ருகமமுறையாற்கச்சபேசன்பாலடைந்துபூசனைசெய்தேத்தெடுப்பான்
மாகர்போற்றிசைக்குமிளம்பிறைமோலிவள்ளலேயுலகளித்தழிக்கு
மேகனேயாமையுருவொழித்தரியையாண்டநின்னிணையடிபோற்றி. ௩௰

காசிகேதாரம்புட்கரங்குருக்கேத்திரங்கடிநைமிசங்களினு
மோசைகொள்காஞ்சியதிகமென்றுரைப்பதுரைப்பிரமாணமொன்றன்று
லீசனேநீயுமுமையுமேயல்லாலிங்ஙகர்படைத்தவரில்லை
தேசுறயானேகண்ணுறக்கண்டுதெளிந்ததாமெந்தவூழியினும். ௩௧

புரியுநின்னருளாலுயர்ந்தவரனேகர்புரவுபூண்டொட்டுருவெடுத்தோய்
வரிவிழியுமையாண்மணந்தபேரின்பவடிவமேயிடும்பைநோயறுக்குங்
கருணைவாரிதியேயிரங்கிடாயெமக்குக்களைகணீயன்றிவேறிலையென்
றிருகணீர்சொரியநெக்குநெக்குருகியேத்தினனைத்தழுதபேற. ௩௨

கச்சபேசர்காட்சி.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திசைமாமுகன்வாழ்த்தொலியஞ்செவியிற்சென்றேறலுமாரருளுத்ததலான்
மிசைவானவர்பூதகணம்புடையின்மிடையப்பெருமானெதிர்நின்றருளி
வசைதீர்தரவேட்டவரந்தருகேமைந்தாவுரைசெய்கெனவாய்மலர
விசைபாடினனேகைதரும்பிடநின்றிதுகூறுதலுற்றனன்வேதியனே.

நின்றொண்டுவெழாதவனென்புதல்வனிடந்தவமுற்றுசனற்குமாரன்
முன்றிண்சதகோட்டிடைநின்னிருதாண்முன்னிச்சிவயோகுமயன்றிதவத்
தொன்றும்பொழுதாயிடைகீவருதலுணர்ந்தானல்லிட்டகருத்துறலா
லன்மைக்கருணைந்திசபித்ததனுலொட்டகவாக்கையனுயினனே. ௩௪

திசைமுகனுலஞ்சிக்கப்படுதலினற்காஞ்சியெனத்திசையோய்மல்கு
மிசையுடையதிதுபிரமலோகமென்றுமிதனற்பேரெய்துமாற்ரு
ணசைவிலாதிங்குறைவோரெல்லார்க்கும்வீடுதவுமவ்வூர்நாப்பண்
வசையின்றித்திப்பியமாய்ப்புண்டரிகம்போலெமக்குவயங்குங்கோயில்.

அங்கதனிற்சோதிலிங்கவடிவாகியாமென்றுமமர்வேமிவ்வூ
ரிங்கிரண்டாமுறைவிளம்புஞ்சந்தோசாம்முறையெம்மையோளிவானென்
றுங்ககர்தனைப்பிரமபுரமென்னுமிறுதிம்முறைசுவர்க்கமென்னும்
பங்கமறுதயித்திரியஞ்சோதிசூழ்சுவர்க்கமென்ப்பகராநிற்கும். ௨அ

அப்பிரமபுரங்காஞ்சிநகரல்லால்வேறில்லையாகுமென்றே
செப்புமபநிடதமெலாஞ்சிவர்கமங்களொடுமுழக்குஞ்செல்வீயிந்த
வைப்பினைச்சேயிடையாயினுமாயிடையாயினுமிருந்துவணங்கிற்கண்ணி
லெப்பெருபாவமுநீங்கிவீடெய்துமுனகருண்மையியப்பினேமால். ௨௬

எனவிறைவனுலகுயயவிறைவுமலைப்பெருமாட்டிசகியம்பும்வாய்மை
யன்றுவினவியசனற்குமாரனுக்குத்திருநந்தியறைந்தானன்னோன்
வென்றபெறிவாதராயணற்குரைப்பவவனெனக்குவிளம்பலசெய்தான்
குன்றனையபெருந்தவத்தீர்சிவனைக்காண்பதற்கேதுவிதுவேகொண்மின். ௩௰

பரவருமந்தணமாகுமிக்காதைமெய்யன்பிற்படிப்போர்கேட்போர்
கரிசுறுநோய்நீங்கிநெடுநாட்புவியினமக்களொடுங்களித்துவாழ்ந்து
வாகுணராயமறுமையினும்பெரும்போகமினிதுண்டுமாமுமுத்தி
விரவுவரென்றுளங்கொள்ளச்சூதமுனிமுனிவர்க்குவிளம்பினனால். ௩௧

தலவிசேடப்படலமுற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௭௪௪.

## 4 திருநெறிக்காரைக்காட்டுப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மெய்த்தவர்யாவருமங்கதுகேட்டுவிழிக்துணைநீர்வாரக்
கைத்தலமுச்சிமுகிழ்த்துமயிர்ப்புளகங்கண்மலிந்துயர்வார்
முத்திபெற்றுயர்காரணமின்றுதொகுத்துமொழிந்தனைநீ
யததலமேன்மையனைத்தும்விரித்தருளென்றலுமச்சூதன். க

ஊச்சியுளெண்ணறுதீர்த்தநிறைந்துளகாமுறுபலதானம்
பொச்சமிலபோகமும்வீடுமளிப்பனபோக்கருமேன்மையவா
மச்சமறுத்துவியாதனெனக்கருள்செய்தமுறைப்படியே
யிச்சையினேதுவலந்தணிர்கேண்மினெனச்சொலலுற்றனனால். ௨

இந்நகரிற்புகல்சத்தியமாவிரதப்பெயரிற்குணபாற்
றன்னிகர்மெய்த்தலமொன்றுளதங்கமர்சத்தியவிரதீச
ரென்னையுடைப்பெருமாட்டியுமோரிருமைந்தருமுடன்மேவ
மன்னியிருத்தலினத்தலமேன்மையையாவர்வகுக்கவலார். ௩

சத்தியசத்தியர்சத்தியசோதகர்சத்தியசங்கற்பர்
சத்தியகாமரிருத்தலினப்பதிசத்தியவிரதமதாஞ்
சத்தியநன்னெறியார்க்கும்விரைந்தருள்செய்துறுதானமதிற்
சத்தியமாவிரதக்கடமொன்றுளதக்கடதீர்த்தம். ௪

புதனமர்காளினிர்க்கடனுதிபொருந்தமுடித்தங்க
ணிதமுறுசத்தியமாவிரதிசரையேத்திவணங்குவர்தாங்
கீதவினைதீர்ந்தருளுண்மையுணர்ந்துகலப்பர்கண்முத்தியினை,
மதமுறுகாமமயக்கமனைத்துமறுத்துயர்முனிவிர்காள். ௫

மனைவியர்மக்கணிலங்கலைசெல்வமுமற்றெவைவேண்டினு
மனையவைமுற்றுமளித்துயர்வீடுமளிக்குமெத்தீர்த்த
மினையதட்டம்பதியிந்திரதீர்த்தமுமிந்திரபுரமுமெனப்
புனைபெயருமபெறுமப்பெயரெய்தியகாரணமும்பகல்வேன். ௬

இந்திரனுதிதக்கை.

முதுமலராளிதன்மேதகுகற்பமுவராகமதிறுமாறு
முதுமனுவந்தரநாட்சிவியன்றொருவாசவன்முன்னுளனால்
விதுவினையொப்புனரம்பையராகியமென்குமுதங்களிடைப்,
பொதுவறுதானவமாக்கடலுக்குவடாதெரிகனல்போல்வான். ௭

கடவுளர்சேனைப்பங்கயபானுகற்சிறையரிவயிரப்
படையவனோர்நாட்கடவுளவைககட்பாசிறைவெதிர்பொருகோட்
படவரவல்குற்சசிபுடைமேவப்பன்மணியரியணைமேல்
வடிவமடங்கன்மேலொர்மடங்கல்போன்றமைவினனால். ௮

இருபுடைவெண்கவரித்தொகைதுள்ளமிசைக்குடையெழில்செய்ய
விருதுகண்மாகதர்சூதர்முழக்கவியன்மணிமாநிதியைத்
தருவொடுதேனுவிழிக்கடைநோக்கினைநோக்குபுதலைநிற்ப,
வருகுறுகின்னரர்யாழ்மிர்தந்தசெவியாரவிருந்தயர. ௯

மணங்கமழ்தோளணிகற்பகமாலைதுளித்தமுதப்புனல்பாய்ந்
துணங்கருமின்பவிழிப்புனலொப்பவுறைத்துவிழிக்கெல்லா
மணங்குபுரிந்திடல்கண்டுபுலர்த்துநர்போலவிர்சாந்தாற்றி
நுணங்கிடைமங்கையரோவறவெங்கணுநொய்தினசைத்தனுக. ௰

அரம்பையுருப்பசிமேனகைமுதலியவரிமதர்விழிமடவார்
நிரம்பியகாமகலங்கனியவிநயநெறிமுறைகரமசையப்
பரம்புமிடற்றிசைவிம்மிடவிழியிணைபுடைபெயர்பயில்விநெனடும்
வரம்பெறுமற்புதமின்னவிர்கொடியெனமகிழ்நடமெதிர்புரிய. ௧௧

மருத்துவர்வானவர்கின்னரர்சித்தர்வசுக்கணுருத்துக்க
ளுருத்திரர்சாத்தியர்கந்தருவத்தருடுக்கணவக்கோள்க
டிருக்கிளர்மெய்த்தவர்யோகிகள்கையிணைசென்னிமிசைக்குவியா
நெருக்கினுளெய்தியிறைஞ்சிமருங்குறுநிரல்பட நிற்பவரோ. ௧௨

கணங்கொடயித்தியர்யாவரும்வந்துகடைத்தலைவாய்தலின்மாட்
டணங்குபுசெவ்விகிடைத்திலர்நிற்பவொழிந்தவர்தங்குறைதீர்த்
தணங்கருமின்பவெள்ளத்திலழுந்தியளப்பருசெல்வத்தா
னிணங்கலர்கோளரியின்னணமேவுழியெண்ணினனிவையெல்லாம். ௧௩

இந்திரனரசியலைவெறுத்தல்.

இருவினையொப்புவாய்ந்தபருவம்வந்தெய்தலாலே
மருவருந்துறக்கவைப்பினரசியல்வாழ்க்கைதன்னை
யருவருத்துவர்த்துக்காவற்சிறையிடையகப்பட்டோரின்
வெருவரும்பதைக்குமஞ்சும்வேறிவைகருத்துட்கொள்வான். ௧௪

அழியுமிவ்விடயவாழ்விற்களித்திருக்கிற்றாற்கெட்டேன்,
பழிபவக்கடலிற்காலப்பாக்தள்வாய்க்கிடக்துகாணேன்
வழிமுறையறியாமாயவல்லிருட்படுக்கர்ச்சேற்று
ளிழியுமூர்ப்பன்றியேபோலுழக்தவென்னறிவுநன்றால். கஅ

அருவினையுலகமெல்லாம்படைத்தளித்தழிக்குங்காலங்,
கருவுறுமெனையுங்காலவயத்தவாங்காலந்தான்மற்
றொருபொருள்வயத்ததன்றாலுந்தியோன்கற்பத்தீரேழ்
பொருவிலிந்திரர்களுமாய்வர்பொன்றுவர்மனுக்களாமும். கக

ஓதுழிக்கற்பம்வேதற்கொருதினமிந்நாண்முப்ப
தாதலோர்மதியாந்திங்களீராறிரண்டாயினண்டா
மேதமில்வருடநூறேனிருவகைப்பரார்த்தமாகப்
போதருங்கோபோஇலனுண்பொன்றுவன்மன்றமாதோ.

அம்மலர்க்கிழவன்காலமரிக்கொருதினமன்னேனு
மம்முறைதிங்கள்கூடிடாண்டுநூறெய்திற்பொன்று
மம்மவோசிசீயிந்தவனித்தியவாழ்வுவேண்டே
னம்மையில்வீடுபேற்றிற்குபாயமேயறிதல்வேண்டும். கஅ

எண்ணருந்தவந்தானங்கள்பட்டினியெச்சந்தானே
புண்ணியநன்னீராடப்போதலோமுத்திக்கேது
நண்ணுமிவ்வனைத்துந்தேறநமக்கெலாங்குருவாம்பொற்பே
ரண்ணலைவினவுதுமென்னத்துணிந்தனனமரர்கோமான். ககூ

அவையகத்துள்ளார்க்கெல்லாம்விடையளித்தெழுந்துபோந்து
நவையறவிரைவினந்தப்புரத்தினைநணுகியங்கட்
புவிபுகழ்குரவற்கூவிப்போற்றிநின்றிதனைவிள்வான்
சிவியெனத்திசைபோங்கீர்த்தித்தேவர்கட்கிறைவன்மன்னோ. உ0

இந்திரன்தேவதருவிடம்முறைகூறல்.

இவ்வரசியற்கைதன்னிலினியெனக்காசையில்லை
யவ்விதிமுகுந்தனேனோர்வாழ்க்கையுமவாவுகில்லேன்
மெய்வகையுணர்ந்துமுத்திமேவுதற்குபாயமொன்று
செவ்வனேநேர்ந்துரைத்தியென்னத்தேசிகன்றேர்ந்துசொல்வான். உக

இந்திரனுக்குதேவதருவுபதேசித்தல்.

நன்றுநீவினவுமுத்திநற்றவம்வேள்விதானங்
கன்றுபட்டினிவேறென்றாற்காண்பரிதாகுமைந்தா
துன்றியமாயவாழ்க்கைத்தொடக்கறுத்துய்யக்கொள்வா
னொன்றுமெம்பெருமானுள்ளானவன்றிறமியம்பக்கேட்டி.

கலிவிருத்தம்.

குறைவிலாமங்கலக்குணத்தனதலி
னிறைமுலமனுதியினீங்கிநிற்றலி
னறைகுவர்சிவனெனவறிவின்மேலவ
ரிறையவன்பெருமையையாவர்கூறுவார். உக

மேலெனப்படுவனவெவைக்குமேலவன்,
மாலெனப்படுவனவெவையுமாற்றுவா
னாலெனப்படுவனவெவாதுவன்றவன்
வேலெனப்படும்விழிபுரகமேவினன். உச

பங்கயன்றன்னைமுன்படைத்துமான்முதல்
புங்கவர்தம்மைப்பினுதவும்பொற்பினு
னங்கவனிலனெனிலகிலலோகமும்
பொங்கியவல்லிருள்பொதிந்தநீரவே. ௨௫

புகலிரவிலதுளதெனும்பகுப்பிலா
வகலருமிருள்பொதியனுதிகாலயி
னுகலரும்பரசிவனொருவனேயுளன்
மிகுமுணர்வவனிடைவெளிப்பட்டோங்குமால்.

எங்குளயாவையுமிவன்வயத்தவா
மெங்கணுமிவனொருவயத்தினெய்திடா
னெங்கணும்விழிமுகமெங்குங்கால்கர
மெங்கணுந்திருவுருவிவனுகென்பவே. ௨௭

அரியயனமரர்களசுரர்யோகிக
ளிருமாறுவேதவேதாந்தமியாருமிப்
பெரியவனடியிணைகாணும்பெட்பினூற்
றெரிகிலர்மாறுகொண்டின்னுந்தேடுவார்.

அவன்வளதுவெனுமவைதொறுமன்றுயிச்
சிவனலான்முத்தியிற்சேர்த்துவாரிலை
துவளருமிம்முறைசுருதிகூறுமா
லிவனடிவழிபடின்முத்திமெய்துவாய். ௨௯

பன்னுவதெவன்பலபரிந்துநெஞ்சினு
மன்னியர்தமையொழித்தரனையேத்துதி
யின்னதேவீட்டினுக்கேதுவாமெனும்
பொன்னுரைமனகொடுபுகலுவான்சிவி. ௩0

குரவனேயயனரிகுரவனேசிவன்,
குரவனேதந்தைதாய்குரவனேயெலாம்,
குரவனேயென்றுநூலகூறுமுண்மையைக்
குரவனேயென்னிடையின்றுகாட்டினுய். ௩௧

உன்பெருங்கருணையாலுறுதிபெற்றனே
னின்பொடுமெவ்விடத்தெவ்விதிப்படி
பொன்பொதிசடையனைப்போற்றுமாறிது
வன்பொடுமடியனேற்கருளுகென்றலும். ௩௨

கடலுடைவரைப்பினிற்காஞ்சிமாநக
ரிடனுடைக்குணக்கினிலெய்தினரெலாம்
விடலருஞ்சத்தியவிரததானத்தின்
முடிவில்சத்தியவிரதீசன்முன்பரோ. ௩௩

மேற்றிசைச்சத்தியவிரததீர்த்தமொன்
றூற்றமுமேன்மைபெற்றுடையதாமதைப்
போற்றுறும்பசுபதிவிரதம்பூண்டுசென்
றாற்றொழுக்குறநடத்ததகமாதியே. ௩௪

விதியுளிமுடித்துநித்தியநைமித்திகம்
புதியநீறுடலெலாம்பொதிந்துபுண்டர
மதிநுதல்விளங்கிட்டக்கமாமணி
நிதியெனப்பூண்டுகலலொழுக்கநீடியே. ௩௫

தெள்ளொளிப்பளிங்கெனச்சிறந்தசெவ்விசால்
வெள்ளொளிச்சத்தியவிரதநாதனை
யுள்ளகக்கமலத்தின்வழிபட்டுண்மையா
னள்ளலர்க்கடந்துவமுத்திநண்ணுவர். ௩௬

என்றலுமிந்திரனிறைஞ்சியன்கொலோ
வென்றிகொள்சத்தியவிரதங்கேள்வியாற்
றொன்றுளதொடர்புபோதசுழலுமென்மனஞ்,
சென்றுபற்றியதெனக்குரவன்செப்புவான். ௩௭

உள்ளதுகூறினேயும்மையாயிடை
யள்ளிலைக்குலிசநீயணைந்துபுந்திநாள்
வெள்ளநீர்ச்சந்தியவிரதமூழ்கியிண்
டெள்ளரும்விணணகர்கிறைமையெயதினை. ௩௮

ஒருபொழுதாடினரும்பர்கோனிட
மிருபொழுதயனிடமெண்ணுமுப்பொழு
தரியிடநாற்பொழுதாயின்முத்தியே,
மருவுவர்யாரதன்வண்மைகூறுவார். ௩௯

புந்திநாளைமுழுகுநர்புகுவர்முத்தியி
னந்தநாண்மூழ்கலிஞரசநீயுமிப
பந்தமில்வீடுறுபாலையாயினை
மந்தணமிதுமெனக்கேட்டவாசவன் ௪0

இப்பெருந்தீர்த்தநீரமுறைநோன்றினு
மப்புதவாரநாளதிகமாயதென்
செப்புதியென்றலுந்தேசிகப்பிரா
னெப்பறுகருணையினுரைத்தன்மேயினான் ௪௧

சத்தியவிரதர்புதனுக்குவரமருளுதல்.

கொச்சகக்கலிப்பா.

மதிக்கடவுடானாதனைமணந்தின்றமகவான
புதக்கடவுள்கிரகநிலைபெறுவதற்குப்புரிதாதை
கதித்துரைத்தமொழியாறேகருதருஞ்சத்தியவிரதப்
பதிக்கணணைந்துயர்தீர்த்தம்படிந்தாடித்தவஞ்செய்தான். ௪௨

மேதகுசத்தியவிரதப்பெருமானும்வெள்விடைமேன்
மாதுமையாளுடனேறிவயக்கரிமாமுகனிளையோன்
காதல்புரியருணந்திகணநாதர்புடைசூழ
வாதரமோடெழுந்தருளித்திருக்காட்சியளித்தருள. ௪௩

கண்டுபரவசனாகிக்கைதொழுதுபெருங்காதன்
மண்டியெழுமயிர்சிலிர்ப்புமனத்தடங்காப்பேருவகை
கொண்டுநிலமுறவீழ்ந்துகுழைந்துருகிவிழிதுளிப்பத்
தொண்டனேனுய்ந்தேனென்றெழுந்தாடித்துதிசெய்வான். ௪௪

நெடியோனுமலரவனுநேடரியதிருவடிக
ளடியேனுக்கெளிவந்தவருட்கருணைத்திறம்போற்றி
யொடியாதவெண்குணங்களுடையானேயெனையுடையாய்
கடியார்சத்தியவிரதநாயகநின்கழல்போற்றி. ௪௫

என்றேத்தியெந்தையெனையாண்டிரகனிலைபெறவுங்
குன்றாதுன்றிருவடிக்கீழ்மெய்யன்புகூர்ந்திடவு
மின்றாதியென்வாசத்திதீர்த்தம்படிந்துபோற்
வென்றோர்முன்னையினிரட்டிப்பயனெய்திவீடுறவும். ௪௬

வேண்டுமெனவிரந்தேறப்புவளித்தருளிவெள்விடைமே
லாண்டகையங்ககலாமுனைநலனாறுமுதலத்தீர்த்தம்
பூண்டபுதவாரத்துச்சிறப்பெய்துமெபுந்தியுறக்
காண்டியெனுங்குரவனுரைகாளூர்திமேசயிமடுத்தான். ௪௭

இந்திரன்சத்தியவிரதமடைந்துபூசித்தல.

அப்பொழுதேயரசுரிமையம்மறையோன்புடைவைத்துச்
செப்பருஞ்சத்தியவிரதத்திருககரிவிரைந்தெய்தி
முப்பொழுதுநீராடிமுழுநீறுமெய்ப்பூசி
மெய்ப்படிகண்டிகைபூண்டுபுண்டரமுதலவிளங்க.

உருத்திரமுங்கணிதத்துள்ளப்புண்டரிகத்துமைபாகன்
றிருப்பதங்கள்சிந்தித்துககோயிலினுட்சென்றெய்தி
யருத்தியொடும்பூசனைசெய்தாராமைக்கமகொள்ளப்
பெருத்தெழுந்தபேரன்பிற்பெருமானைத்துதிக்கலுற்றான். ௪௮

இந்திரன்துதித்தல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மறைமுடிவினனுந்தேருமலர்ச்சிலம்படியாய்போற்றி
யறைபுனலுலகமெல்லாம்படைத்தளித்தழிப்பாய்போற்றி
சிறைநிறைவாசந்தெண்ணீர்ச்சத்தியவிரதத்தீர்த்தத்
துறைகெழுவரைப்பின்மேயசுந்தரவிடங்காபோற்றி.

அண்ணலேவிடயத்துன்பமாற்றிலேனோலமோல
மெண்ணரும்யோனிதோறுந்திரிந்தலைந்தேனோலங்
கண்ணினுண்மணியேவேறுகண்டிலேன்களைகணோலம்
புண்ணியமுதலேயின்பப்பூரணாவோலமோலம். ௫௧

புழுப்பொதிந்தசும்புபாயுமபுன்புலையுடலையோம்பிக்
கழித்தனன்காலமெல்லாங்கடையனேன்பொறிகள்யாண்டு
மிழுத்திழுத்தலைப்பநொந்தேனினித்தினைப்பொழுதுமாற்றேன்
சழக்கறுத்தருள்வாயுன்றன்சரணமேசரணமையா. ௫௨

இந்திரனுக்குசத்தியவிரதர்காட்சிகொடுத்தருளுதல்.

அடைக்கலமடியேனென்றென்றழுதிரந்தயருங்காலே
விடைத்தனிப்பெருமானன்னோன்பத்தியின்விளைவுநோக்கி
நடைப்பிடியுமையாளோடுநண்ணிநீவேண்டிற்றென்னை
யெடுத்துரைதருதுமென்றானிந்திரன்றொழுதுவேண்டும். ௫௩

வினைவழிப்பிறந்துவீந்துமெலிந்தாளெல்லையில்லை
யனையவற்றடிகேளுன்றனடிதொழப்பெற்றிலேனு
னினைவருந்தவத்தாலின்றுநின்னருட்குரியனானே
னினிவரும்பிறவிமாற்றியென்றனையுய்யக்கோடி. ௫௪

இத்தலந்தீர்த்தமென்றன்பெயரினானிலகவேண்டு
மத்தனேயென்னலோடுமவ்வகையருளிமீளா
முத்திசேர்கணநாதர்க்குண்முதல்வனாந்தன்மைநல்கிப்
பைத்தபாம்பாரம்பூண்டபண்ணவனிலிங்கத்தானான். ௫௫

அற்றைநாண்முதலச்சூழலிந்திரபுரமாமங்கட்
கற்றைவார்சடையீரோர்காற்கண்ணுறப்பெற்றோர்தாமும்
வெற்றிவேற்காலன்றன்பால்விரவிடார்கருவிலெய்தா
ரிற்றதன்பெருமைமுற்றும்யாவரேயியம்பவல்லார். ௫௬

சத்தியவிரதங்காரைத்தருவனஞ்செறிதலாலே
சித்திசேர்ந்தவர்க்குநல்குந்திருநெறிக்காரைக்காடென்
றித்திருப்பெயரினோங்குமென்பரான்மாசுதீர்ந்த
வுத்தமக்கேள்விசான்றவுணர்வுடையும்பர்மேலோர்.

திருநெறிக்காரைக் காட்டுப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௫௦௧

# 5 புண்ணியகோடீசப்படலம்.

கலிநிலைத்துறை.

செச்சைச்சடையந்தணிர்தேமலரோடைசூழ்ந்த
மெய்ச்சத்தியமாவிரதத்தலமேன்மைசான்றுங்
கச்சிப்பதியிற்கவர்புண்ணியகோடிமேன்மை
நச்சிப்புகல்கின்றனநன்குமதித்துக்கேண்மின். ௧

மின்பாய்பொழிற்சத்தியமாவிரதத்தலத்தின்
றென்பாலதுபுண்ணியகோடிநந்தேவன்வைப்பு
வன்பாலர்களெய்தரும்புண்ணியதீர்த்தமாடே
யென்போலிகட்குஞ்சிவப்பேறெளிதெய்துமங்கண். ௨

சிவபெருமானிடத்துவிஷ்ணுவரம்பெறுதல்.

மலர்மேயவன்மேகநல்வாகனகற்பமொன்றிற்
றலமேம்புகழ்நாரணன்றாமரையாளியாதி
யுலகேழையுமீன்றிடுமோசையினும்பர்கோனைப்
பலநாண்முகிலினுருக்கொண்டுபரித்தல்செய்தான். ௩

நம்மானிரங்கிக்கடைக்கண்ணருணல்கிமாலோய்
வம்மோசுரராண்டினிலாயிரவாண்டுமற்றிங்
கிம்மேகவுருக்கொடுதாங்கினையெம்மைவேண்டு
மம்மாவரநல்குதுமோதுதியென்னவன்னோன். ௪

எந்தாயொருநின்றிருமேனியிடப்புறத்து
வந்தேனடியேனுயர்நின்னருள்வண்மைதன்னா
னந்தாதவிவ்வாழ்க்கையுமெய்தினனஞாலமுற்றும்
பைந்தாண்மலரோனையுநின்னுபடைத்தல்வேட்டேன். ௫

அவ்வாற்றலளித்தருளென்னுழுரிக்குரைத
னிவ்வாற்றல்கச்சிப்பதியெய்தியிலிங்கத்தாபித்
தொவ்வாகளினங்களிறுஞயர்பூசையாற்றிற்
செவ்வேபெறுகிற்பையெனத்திருவாய்மலர்ந்தான். ௬

விஷ்ணுகாஞ்சியில்சிவபூசைசெய்தல்.

அங்கப்பொழுதேவிடைகொண்டருட்காஞ்சியெய்திப்
பொங்கிப்பொலிதீர்த்தநறும்புனலாடிச்சூழுந்
தெங்கிற்பொலியிந்திரநன்னகர்த்தென்றிசைக்கட்
டுங்கச்சிவலிங்கமிருத்திமெய்யன்புதோன்ற. ௭

தெண்ணீர்த்தடமொன்றுவகுத்துத்திருந்தமூழ்கி
வெண்ணீற்றணியக்கமணிக்கொடைமெய்விளங்கக்
கண்ணீர்க்கமலம்பலகொய்துகருத்துவாய்ப்ப
வண்ணீர்ச்சிவபூசனைநித்தலுஞ்செய்துவாழ்ந்தான். ௮

கஜேந்திரன் தொண்டு செய்தல்.

வேறு.

அன்னோனேவன்மெய்ப்பணியாற்றுமுன்பூந்தத்
தன்னேரில்லாவோர்மதவேழந்தானெய்தி
யென்னாயகனேயென்பணிகொள்வாயென்றேத்திப்
பொன்வாடேன்றுமுன்னரெழுந்துபுனலாடி. ௯

நாளலர்தாமரைபாதிரிவில்வநறும்புன்னை,
தாளுயர்சண்பகமல்லிகைதண்கழுநீர்மௌவல்,
கோளறுகோங்குமுதல்பலகொய்துகொடுத்தென்றும்
வேளையளித்தவனுண்மகிழ்வித்திடுநாளில். ௧௦

கஜேந்திரனைமுதலைப்பற்றல்.

ஓப்பகனீர்நிறைபூந்தடமொன்றுறுபூக்கொய்வான்
சீர்தருதிண்கரிசேறலுமங்கொருவன்மீன
நீரிடைநின்றுவெகுண்டடிபற்றிநிமிர்ந்தீர்ப்பக்
காரொலிகாட்டியகன்கரையீர்த்ததுகாய்வேழம். ௧௧

இவ்வகைதண்புனலிற்கரைமீதிவையோவாமே
தெவ்வுடனீர்ப்புழிபாண்டுகளெண்ணிலசென்றேகக்
கைவரையாற்றரிதாயலறிக்கருமாமேகத்
தவ்வடிவோனையழைத்ததுமூலமெனக்கூவி. ௧௨

விஷ்ணுகஜேந்திரனைக்காத்தல்.

அண்டரெலாம்யாமூலமலேமென்றகல்போழ்திற்
புண்டரிகக்கட்புண்ணியனன்புள்ளரசின்மேல்
கொண்டெதிரெய்திக்கரியரசெய்துங்கொடுவெங்கோய்
கண்டளெக்கானஞ்சலையஞ்சேல்களிறென்னு. ௧௩

ஆழியெறிந்தானதனுயிருண்டான்கரியோடும்
வாழியகாஞ்சிமாநகரெய்திச்சிவபூசை
வேழமளிக்குமேதகுபள்ளித்தாமத்தா
லூழ்முறையாற்றித்தவநனிசெய்தங்குறைகாலை. ௧௪

எண்ணருவானோரின்னமுநாடற்கரியானைக்
கண்ணிணையாரக்காண்டகுகாதல்கைமிக்கங்
குண்ணிகழன்பானெக்குருகிக்கணுறைசிந்தப்
புண்ணியவேதப்பழமொழியோதிப்புகழ்கிற்பான். கரு

விஷ்ணுதுதித்தல்.

கொச்சகக்கலிப்பா.

நீராய்நிலனாய்நெருப்பாய்வளிவானு
யோராரிருசுடராயுவியாயாவைக்கும்
வேராகிவித்தாய்விளைவாகியெல்லாமாம்
பேராளாவெங்கள்பிரானேயடிபோற்றி. கசு

அண்டபகிரண்டமனைத்துமகத்தடக்கிக்
கொண்டுநிறைந்தோங்கியபேரின்பக்குரைகடலே
தொண்டரெலாமுண்ணத்தெவிட்டாச்சுவையமிர்தே
தண்டலைசூழ்கச்சித்தலைவாவடிபோற்றி. கஎ

மாறுவறக்கடவுணமானவடியேனு
மேறாகித்தாங்கவருள்சுரந்தவெம்மானே
சீறுதுமைகளிப்பத்தேவியாக்கொண்டெனைநின்
கூறுட்வைத்தகுணக்குன்றேயடிபோற்றி. கஅ

திக்காடையாதியணியோடுதீவினையே
னக்கோடுகண்ணேடுரியென்புணிந்தானே
யிக்காய்மழுமுதலாம்வான்படையோடென்றனையுந்
தக்கோர்புகழ்கணையாக்கொண்டாய்சரண்போற்றி. கசூ

மெய்யடியார்சாத்தும்விரைமலர்போலன்பிலாப்
பொய்யடியேனான்விழியுங்கொண்டருளும்பொன்னடியாய்
செய்யானேநந்திகணத்தவர்போற்சேயேனு
மெய்தியருட்கூத்தினியமுழக்கும்பேறளித்தோய். உ0

ஆலமுளக்கரெழுமந்நாளடைக்கலமென
றோலமிடுமெங்கட்குயிரளித்தசீராளா
காலமேகாலங்கடந்தபெருங்கருணைக்
கோலமேயானந்தக்குன்றேயடிபோற்றி. உக

விஷ்ணுவுக்குசிவபெருமான்காட்சிகொடுத்தருளுதல்.

கலிவிருத்தம்.

என்னப்பலபன்னியிரந்தயரும்
பொன்னுக்கிறைமேலருள்பொங்கியெழ
மின்னற்சடையோன்விடைமீதுவரை
யன்னத்தொடுகாட்சியளித்தனனால். உஉ

கண்டானிருகண்களிகூரமகிழ்
கொண்டான்வறியோன்கொழிதெள்ளமுத
முண்டானெனவோடினனோடினனால்
வண்டாமரைமாதுமணாளனரோ. உங

அதுகண்டுமைபாலருணைக்குதவி
விதுவொன்றுபொலஞ்சடைவிண்ணவனோர்
முதிருங்குறுமூரன்முகத்தலர
மதுசூதனகேட்டிவரந்தருகேம். உச

நார்வானவர்தம்மினுநாரணநீ
பெருவான்வலிபெற்றனையெம்மருளாற்
பொருபோரினுமெம்மினும்வென்றிபுனை
வரமெம்மிடைமுன்பெறுமாதவனே. ௨௫

எனவங்கருள்செய்தலுமிந்திரைகோன்
மனமொன்றவணங்கிவணங்கியெழுந்
தனதம்புயபாதயுகத்தடியேற்
கனகம்பெறுபத்தியளித்தருளாய்.

வரதாமரையோனொடுமெய்த்தலகும்
வரதாதரல்வேட்டமனத்தினனாயாய்
வரதாவரமீதுவழங்குதிநீ
வரதாவெனவோதியழுத்தியனும் ௨௭

நின்னைசைநிரம்பவரங்கவொளவ
மின்னேகொளநலகினைமேவினையாமா
மனனுபலகாலவரதாவெனநீ
சொன்னயெனமையன்புதுனும்புமவே. ௨௮

வாசத்துளவோயினிநீவரத
ராசப்பெயராற்பொலிவாயெமதாள்
பூசித்தனைபுண்டரிகங்களினாற்
பேசிற்பதுமாக்கனெனப்பெறுவாய். ௨௯

அறுசீரக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

என்றருள்புரிந்தவள்ளலிணையடிவணங்கிமாயோன்
வென்றிவெள்விடையாயின்னும்விண்ணப்பமொன்றுகேட்டி
நின்றிருப்பாதபூசைநித்தலுமடியேனாற்ற
நன்றுமிவ்வத்தியேவற்பணிநயந்தொழுகிற்றன்றே. ௩௦

என்னிடையன்புசாலப்பூண்டதாலிதன்பேர்தன்னா
லுன்னெதிரடியேன்வாழுமுயர்வரைக்குடுமியோங்கன்
மன்னுசீருலகினத்திகிரியெனவழங்கல்வேண்டுங்
கன்னலஞ்சிலைவேளாங்கனல்விழிக்குதவவல்லோய். ௩௧

புண்ணியதீர்த்தப்பொய்கைப்புனல்படிந்திங்குளார்செய்
புண்ணியமொன்றுகோடிமடங்குறப்புரிந்துமற்றிப்
புண்ணியகோடிவைப்பினுயிர்க்கெலாங்கருணைபூத்துப்
புண்ணியகோடிநாதலிங்கத்திற்பொலிகநாளும். ௩௨

அடியனேன்றண்டாதென்றுநின்னெதிரமர்ந்துபோற்றக்
கடிகெழுகற்பத்தண்டார்க்கடவுளர்முனிவர்யார்க்கு
முடிவறுவரங்களல்கிமுழுதருள்சுரந்துவாழி
கொடியவெஞ்சீற்றத்துப்பிற்கூற்றுயிர்ப்பருகுந்தாளோய். ௩௩

அண்ணலேயென்றுவேண்டவவற்கவையருளியெங்கோன்
புண்ணியகோடிநாதலிங்கத்துட்புக்கானந்நாட்
கண்ணுதற்பரனைமாயன்காருருக்கொண்டுதாங்கும்
வண்மையாற்கற்பமேகவாகனப்பெயர்பூண்டான்றே. ௩௪

புண்ணியகோடீசப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௫௩௪.

# வலம்புரிவிநாயகப்படலம்.

கலிவிருத்தம்.

நலம்புரிபுண்ணியகோடிநாதர்தம்
புலம்புரிபெருமையைப்புகன்றுளேமினி
நிலம்புரிதவத்தினீரத்திநீள்வரை
வலம்புரிவிநாயகன்மாட்சிசெப்புவாம். க

முன்னொநாளயனரிமுனிவர்வானவர்
கின்னரரோரிடைக்கெழுமித்தங்களுட்
பன்னுதலுற்றனர்படிறர்செய்வினை
யங்கிலையூறின்றியமுகின்முற்றுமால். உ

அங்கவர்தமக்கிடையூற்றையாக்கவு
நங்களுக்கூறுதீர்த்தினிதுநல்கவு
மிங்கொருகடவுளைப்பெறுதற்கெம்பிரான்
பங்கயத்திருவடிபழிச்சிவேண்டுவாம். ௩

விக்கினமகலவிண்ணவர்வேண்டல்.

என்றுளந்துணிந்தனரெய்திமந்தரக்
குன்றமீதெம்பிரான்கோயிலுள்ளுறுச்
சென்றனர்தொழுதனர்செவ்விநோக்கிமுன்
னின்றனர்மறைகளாற்றுதிநிகழ்த்தினர். ௪

அறுசீரக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சற்றிதுதிருவுளஞ்செய்துகேட்டருளுதிதலைவனேவெங்
குற்றமேதுறுமனத்தானவக்கொடியவர்தொடங்குசெய்கை
முற்றுறுதூறுபட்டழியவுமெம்மனோர்முயன்றசெய்கை
யிற்றுறுதூறுதீர்ந்தாகவுங்கருணைசெய்யெனவிரந்தார். ௫

விநாயகர்திருவவதாரம்.

அம்மொழிசெவிமடுத்தருள்புரிந்தகிலமுமுய்யுமாற்று
மிம்முறைபுரிதுமென்றவர்க்கெலாம்விடையளித்தெழுந்துபோந்து
கொம்மைவெள்விடையினன்சித்திரச்சாலையைக்குறுகியங்கட்
செம்மைசால்சித்திரம்யாவையுநோக்கினன்றேவியோடும். ௬

வானகத்தச்சனுலகிலமுஞ்சித்திரித்தெழுதிவாய்ந்த
வூனமில்சாலையுளெழுதுமாமனுக்களோடுபமனுக்க
ளானவெல்லாமுமைக்கெம்பிரான்காட்டுபோதவற்றுளாதித்
தானமாரிருவகைப்பிரணவமனுக்களைத்தையல்கண்டாள். ௭

உவகையாற்பற்பல்காலுநோக்கியிங்கிவையெவையுரைத்தியென்னச்
சிவபிரான்றேவியைத்தழீஇயினன்கூறுவான்செல்விகேட்டி
தவலில்பிரணவமதுகாண்மூவரைத்தந்ததாகு
நவிலின்மற்றதுநினதாகுமுச்சத்தியைநல்குமூலம். ௮

மும்மறைமுதலெலாமீன்றிடுமிருமுதுகுரவரான
விம்மனுக்கரியொடும்பிடியெனத்தோன்றலினிவைகளாகி
யம்மநாம்புணர்துமென்றவ்வுருக்கொண்டனராடுகாலைச்
சும்மைநீருலகெலாமுய்யவந்துதித்தனன்றோன்றலன்றே. ௯

கயமுகப்பிள்ளையையிருவருங்காதலானெடுத்தணைத்து
வயமுறமடித்தலத்திருத்திமெய்க்கலன்பலவணிந்துவாழ்த்த
வியலபுடைப்புதல்வனுமுமைகையானெழுந்தெதிர்நடித்தல்செய்தா
னயனமாக்களிகொளநோக்கினளுலகெலாமீன்றநங்கை. கo

அங்கையானைத்திநின்றுடல்கண்டகங்களிதுளும்பியையன்
பங்கயப்பதந்தொழுதிறைவநீபயந்தசேயிவனையின்னே
யெங்குளகணங்களும்பல்கணநாதருமெவருமேத்தத்
துங்கமாமிறைமையீந்தருளெனவேண்டலுஞ்சூலபாணி. கக

கடவுளர்முனிவரரயனரிபலகணநாதரெல்லா
முடன்வரத்திருவுளஞ்செய்தழைத்தோதுவான்மடித்தலத்தி
மிடலுடைச்சிறுவனையிருத்திமற்றிங்கிவன்வெற்பின்வந்த
மடமயிற்கினியவன்யாம்பெறுமூத்தமாமைந்தனோர்மின். கஉ

இவனையிவ்வுலகெலாந்தொழுதெழுமிறைமையினிருத்துகின்றேங்
குவிமுடிசூட்டுவான்வேண்டுபகரணங்கொணர்மினென்றே
யவரவைகொணர்ந்தபின்மைந்தனைமடங்கலாதனத்தினேற்றிச்
சிவபிரான்றிருவபிடேகநீராட்டினன்மகுடஞ்சேர்த்தான். கங

அரசினுக்குரியநலலணிகளானலங்கரித்துமாபுகூரப
பிரமனைமாயனைத்தேவரைமுனிவரைப்படைப்பினோக்கி
யுரனுடையுலகெலாநாயகனிவனிடையூறுறுனுக்குங்
கரவிலாநாயகனுகநாம்வைத்தனங்கண்டுகொண்மின. கச

தீயவத்தானவர்க்கூறிழைப்பானிவனென்றுமெசப்புந்
தூயவன்வாய்மொழிதலைமிசைக்கொண்டனர்துதித்திறைஞ்சி
மாயவன்முதலியோர்கணேசனைவணங்கினர்கையுறைக
ளேயுமாறுதவினர்விடைகொடுத்ததமதிருக்கைசேர்ந்தார். கரு

விநாயகர்திருவிளையாடல்.

கலிவிருத்தம்.

பொருவருந்தடநெடும்புழைக்கையேந்தலு
மிருமுதுகுரவர்தாளிறைஞ்சிமேவுபா
ளொருவருங்கணங்களோடுலவிமெய்யகனும்
திருவிளையாடலிற்சிந்தைவைத்தனன். கசு

ஒளித்துநின்றுடன்பயிலுமைச்சிறூர்மிசைத்
தெளித்தெழுபுழைக்கைநீர்த்திவலைதூஉயிது
துளித்ததுமுகிலெனச்சொலவியுள்ளகங்
களிப்பவான்கருமையைக்காட்டிவஞ்சித்தும். கஎ

புழைக்கையின்மோந்துயிர்ப்பெறிந்துபூமியைக்
குழித்துமுன்னணிந்தனபழமைகூர்ந்தவென்
றொழித்தகல்பாதலத்துரகம்யாவையு
மிழுத்தெடுத்தணியெனப்புயத்திலேற்றியும். கஅ

ஒன்பதுகோள்களுமுடுக்கணங்களுந்
துன்பறப்பிணித்தசைதுருவசூத்திரம்
வன்பனைக்கரத்திலும்பற்றுமார்பிடை
யன்பமர்வடமணியாரமாக்கியும். ககூ

என்னைநீர்கண்டெடாதிருப்பதென்னெனப்
பன்னகமெவற்றையுங்கனன்றுபற்றிவான்
மன்னிடவீசியங்குடைந்தவானதி
தன்னுடைத்தந்தைபோற்சடிலத்தேந்தியும். உ0

கலிநிலைத்துறை.

இவ்வகைப்பலசிறுகுறும்பெங்கணுமியற்றிக்
கௌவைநீர்விளையாட்டினிற்காதலனொருநாட்
பௌவம்யாவையுமுழக்கினன்பாற்கடல்புகுந்தான்
கொவ்வைவாயுமைபயந்தருள்குஞ்சரக்குரிசில். உக

புகுந்துவெள்ளநீர்முழுவதும்புழைக்கையின்மடுத்தான்
மிகுந்தபன்மணிநீருறையுயிர்கள்வெம்பணிக்கோன்
முகுந்தனுந்தியன்றிருந்தநான்முகப்பிரான்முகுந்தன்
சகுந்தமன்னவன்றிருவுமப்புழைக்கையுட்சார்ந்தார். உஉ

வறுங்கடற்பரப்பகட்டினில்லெஞ்சுகூர்பங்க
ளுறுங்கரும்பெருஞ்சேற்றிடையாழிப்பனமுன்னு
ணறுந்துழாயணியாமையைநவிவுறப்பற்றிக்
குறும்படக்கியபிரான்வருதிறங்குறித்தனபோல. உஙு

மாயமீன்விழிபறித்தவன்முன்வருமிளவன்
மேயவாறுகண்டனவெனத்துடிப்பனசிலமீன்
பாயபூம்புனலரசனம்பனுக்கிடுந்திறைபோற்
சேயபன்மணிவயின்றொறுமிமைப்பனசிலவே. உச

ஐயன்வார்செவிக்காற்றினிலலைகண்மிகவெறிந்து
வெய்யபேரொலிகாட்டுவெறிவியன்கடல்கண்
மையகன்றதங்கிளைவறங்கூர்ந்தமைகாணூஉக
கையெறிந்தழுதிரங்கிவீழ்ந்தரற்றுவகடுக்கும். உரு

இன்னவாறுபாற்கடலவறந்தழிவுறவிருங்கை
தன்னிலேற்றநீர்மீளவுந்தரைமிசைவிடுத்தா
னன்னநீருடன்வீழ்ந்தனரயனரிமுதலோர்
துன்னுநீபடுதுரும்பெனத்திசைதொறுஞ்சிதறி. உசு

பின்னரோரிடைத்திரண்டுடன்குழீஇயினர்பெரிது
மின்னலுற்றமைதத்தமுடபேசினரெளியோ
முன்னைநல்வினைப்பயத்தினுலின்றுமூதுலகந்
தன்னிலவந்தவாமறுபிறப்பெனமதித்தனரால். உஎ

விஷ்ணுபாஞ்சசன்னியமிழத்தல்.

மருட்சிதீர்ந்தபின்மாயவனிடக்கையின்வழுவு
முருட்சிகூர்ந்தவெண்சங்கினைக்காண்கிலனுயங்கி
வெருட்சிகொண்டனன்றேடினன்வியன்றிசைப்புறத்துத்
தெருட்சிகொண்டதுவொலிப்பதுகேட்டனன்செவியில். உஅ

ஓசையாலதுபாஞ்சசன்னியமெனவுணர்ந்தவ்
வாசையிற்சிலர்தமைச்செலவிடுத்தனனவர்போய்
மாசிலைங்கரப்பிரான்கணம்வாயிடைக்கொண்ட
வேசறுஞ்சுரிமுகத்தினைக்கண்டுமீண்டுரைத்தார். உகூ

